REGD. NO. M. 4392



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்




டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாசனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென்று நீண்டு வளரச் செய்வ தோடன்றி, மூளைக்கு குளுகுளுப்பையும் அளாதி கறுகறுப்பை யும் அளிக்கிறது.



## டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டுகள்

கராஜ் ஏஜன்ஸீஸ்

167, லாயிட்ஸ் ரோடு. ராயப்பேட்டை, சென்னை

கோவை, பாலக்காடு அன்டு சேலத்திற்கு
சோல் ஏஜண்டுகள்

B. பாலபட்டாபி செட்டியார்
246, வைசியாள் தெரு. கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு

சேகர்ஸ், திருப்பத்தூர் (N. A.)

# இதய நோயா?

....என்ன செய்யவென்று கூறுவேன்



இவ்வுபாதைகள் அதி கோரமானவை என்று காலரி வேன். மிக அசாதாரணமாகவும், உணவுக்குப் பின் வயிற்றில் அஜீரணம், உப்புச உணர்வுகளைத் தரும் அமிலத்தின் சேர்க்கையாலேயே இவ்வுபாதைகள் ஏற்படுகின்றன. வீணு அமிலங்களுக்கு மாற்று, எப்போதும் போல ஜீரண சக்தி யளிப்பது, என உலகறிந்த பிஸ்மாக் சிபாரிசு செய்கிறேன். 3 நிமிஷத்தில் வலி இடைஞ்சலின்றி ஜீரணமாக உதவுகிறது. இன்று பரிக்ஷியுங்கள்.

உங்களுக்கு வேண்டியது

எல்லா கெமிஸ்டுகளிடமும் ஸ்டோர்களிலும் பவுடராகவும் மாத்திரையாகவும் கிடைக்கும்.




இந்தியாவுக்குப் பூரண விநியோகஸ்தர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிமிடெட்
பம்பாய் - கல்கத்தா - டெல்லி - மதராஸ்



## நான் முட்டாள் தனமாகப் பணவிரயம் செய்திருக்கிறேன்

ஒரு வாரத்திற்கு மூன்றே க்ஷவரங்களுக்காக நாவிதனுக்கு 6 அணுக்கள் கொடுப்பது அதிகனம். ஏழுநாட்களில் நான்குநாட்கள் உங்கள் தோற்றம் கவர்ச்சியற்றதாயிருப்பதோடு, பலதரப்பட்டவர்களுக்கு உபயோகித்த கத்தியினுல் ஏற்படும் நோய்களின் அபாயமும் உண்டாகலாம்.



## நானே க்ஷவரம் செய்து கொள்வதால் பணமும் மிச்சமாகிறது.

ஒரு 7ஓ'க்ளாக் ரேஸர் வாங்கி அதனுல், சுத்தமாகவும் மழமழப்பாகவும் க்ஷவரம் செய்துகொண்டு உங்கள் வாழ்நாட்களில் ஒவ்வொருநாளும் ஏன் கவர்ச்சிகரமான தோற்றத்துடனிருக்கக்கூடாது? அழகிய பெட்டியில் அடக்கஞ்செய்யப்பட்டு முழுவதும் உலோகத்தாலான ஒரு 7ஓ'க்ளாக் ரேஸரும் இரண்டு பிளேடுகளும் விலை ரூ. 1 தானுகிறது. 5 பிளேடுகள் கொண்ட ஒரு புதிய பாக்கெட்டின் விலை அணு 7.

தினமும் 7ஓ'க்ளாக் ரேஸர் பிளேடுகளாலேயே க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்

# 7o'clock

## RAZOR & BLADES



இரண்டு பிளேடுகளுடன் ரேஸர்

விலை ரூ. 1




7ஓ'க்ளாக் ரேஸர் பிளேடுகளினுல், சீக்கிரமாகவும் சிக்கனமாகவும் க்ஷவரம் செய்துகொள்ளும் முறையை இன்றே ஆரம்பியுங்கள். அதிகம் கூர்மையுள்ள ஒவ்வொரு 7ஓ'க்ளாக் பிளேடும் சுத்தமாக அநேக க்ஷவரங்களை அளிக்கும் 5 பிளேடுகள் கொண்ட பாக்கெட் ஒன்றுக்கு விலை அணு 7.


Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

அவர்களுக்காக சேமித்து வைத்தீர்களா ?





முதலீடுங்கள்

நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்களில்

இவை தபாலாபீஸுகளிலும், அதிகாரம் பெற்ற ஏஜெண்டுகளிடமும்
(நியமிக்கப்பட்டிருக்கும் இடங்களில்), ஸேவிங்ஸ் பீரோக்களிலும் கிடைக்கும்.

புது டில்லி இந்திய சர்க்கார் நிதி மந்திரி இலாகாவால் வெளியிடப்பட்டது.

AC76TM

## முன்னேற்றத்தின் முன்னணியில்

# எஃகு இந்தியாவின் எல்லைகளை இணைக்கிறது......





இந்திய பிரதேசத்தின் மூலமாக புதிதாக அமைக்கப்பட்ட 142½ மைல் நீள மீட்டர் கேஜ் ரெயில்வே லைன் (இருப்புப்பாதை) போக்குவரவு சாதனத்திற்காக இப்பொழுது திறக்கப்பட்டிருக்கிறது. இப்பாதை அஸ்ஸாமை இந்தியாவுடன் இணைக்கிறது. எதிர்பார்த்ததற்கு மாறாக, இப்பெரிய திட்டம் அநேக மாதங்கள் முன்பாகவே முடிக்கப்பட்டுவிட்டது.

இப் பிரம்மாண்டமான காரியம் முடிவுபெற சாதகமாக இருந்தது—ரெயில் பாதைகளும் (ட்ராக்குகள்) மற்றும் அநேக இதர ரூபங்களில் உபயோகிக்கப்பட்ட எஃகும் தவிர— 7000டன் இந்திய எஃகே.

**டாடா எஃகு**

தி டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி லிமிடெட்,
தலைமை சேல்ஸ் ஆபீஸ்: 23B நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா.

அந்த மகா வித்வானும் மறைந்துவிட்டார். அவருடைய உயர்ந்த சங்கீதத்தைக் கேட்பதற்கு ஒலிப்பதிவு செய்யாதது மன்னிக்க முடியாத குற்றமென்று வித்வான் ஜி. என். பி. அவர்கள் 'கல்கி'யில் எழுதியிருக்கிறார். எல்லா ரஸிகர்களும் இதைக் குறித்து வருந்தத்தான் செய்வார்கள்.

இம்மாதிரி தவறு மீண்டும் நடக்காமல் இருப்பதற்கு மியூஸிக் அகாடமி போன்ற ஸ்தாபனங்கள் பிரயாசை எடுத்துக்கொள்ள வேண்டும். தற்கால மேடை வித்வான்களிடமிருந்து சில பாட்டுக்கள் மிகவும் அழகாக வெளிவருகின்றன என்பது எல்லாரும் அறிந்த விஷயமே. உதாரணமாக, ஆஹிரியில் "ஆதய ஸ்ரீ ரகுவர", காம்போதியில் "ஓ ரங்கசாயி" இவைகளெல்லாம் முசிரி அவர்களிடம்தான் கேட்க முடியும். ஆகையால் பொறுக்கி எடுத்த சில பாட்டுக்களையாகிலும் இத்தகைய வித்வான்கள் பாடுவதை ஒலிப்பதிவு செய்வதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

மயிலாப்பூர்
14—2—50 ஏ. வி. பானு

★

## மனப் பொருத்தம்—போதுமா?

பிப்ரவரி 5-ம் தேதி 'கல்கி' இதழில் ஸ்ரீ எல். என். பார்த்தசாரதி எழுதிய செவ்வாய் தோஷத்தைப் பற்றிய கடிதத்தைப் படித்தேன். ஜாதகப் பொருத்தத்தை மட்டும் வைத்துக் கொண்டு, அதனால் ஏற்படும் இன்னல்களினால் நம் பெண்கள் பாட்டிமார்களாவதைப் பார்க்கிலும் மனப் பொருத்தத்தின் மூலம் திருமணங்களை நிச்சயிப்பது வரவேற்கத் தகுந்ததுதான். ஆனால் மனப் பொருத்தம் மட்டும் போதாது என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

பையனுக்கும் பெண்ணுக்கும் மனம் பொருந்தியிருக்கலாம். ஆனால் இவர்களில் யாராவது ஒருவர் பணக்காரராயும் மற்றவர் ஏழையாகவுமிருந்தால் அப்பொழுது பெற்றோர்கள் "நமது அந்தஸ்திற்கு, இவர்கள் அந்தஸ்து சரிப்பட்டு வராது" என்று தட்டிக் கழித்து விடுகிறார்கள். இதனால் அநேக கலியாணங்கள் பேச்சளவிலேயே நின்று விடுகின்றன. இந்நிலையில் "இவ்வேழைப் பெண்ணை நான் விரும்புகிறேன். இவளை என் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொள்கிறேன்" என்று சொல்லுவதற்கு யாருமே தயங்குவார்கள். அதிலும் படித்தவர்கள் கண்டிப்பாய்த் தயங்குவார்கள். மேடைகளில் ஏறிப் பிரசங்கம் செய்யலாம், மார்தட்டிப் பேசலாம், ஆனால் காரியாம்சத்தில் துணிந்து இறங்குபவர்கள் வெகு சிலர். ஸ்ரீ எல். என். பார்த்தசாரதி சொல்லுவது போல் மனப் பொருத்தம் மட்டும் போதவே போதாது. சமூகத்தில் ஆங்காங்கே ஊறிக் கிடக்கும் மூட நம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்துவிட்டு, தான் தேர்ந்துகொண்ட வாழ்க்கைக்காக, தான் விரும்பும் நபருக்காக எதையும் தியாகம் செய்யக்கூடிய மனோதிடம் நமது இளைஞர்களிடம் இருந்தால் தான் மனப் பொருத்தத்தின் மூலம் திருமணங்கள் நடைபெறுவது சாத்தியமாகும். மேலும் இவ்வித மனப்பான்மை இளைஞர்களிடம் மட்டுமல்ல, பெற்றோர்களிடமும் ஏற்பட வேண்டும்.

திருநெல்வேலி
6—2—50 எஸ். ஜேம்ஸ்

★

## நல்ல புத்திமதி

பிப்ரவரி 5-ந் தேதி "கல்கி" இதழ் வட்ட மேஜைப் பகுதியில், 'ஒரு வேண்டுகோள்' என்ற தலைப்புடன் ஆறாம் பாரம் படிக்கும் ஒரு மாணவனின் கடிதத்தைப் படித்தேன். பரீக்ஷையில் பாஸ் மார்க்கு வாங்குவதற்காகவாவது ஆசிரியரின் மனைவிமார்களை நினைத்துக் கொண்டதைப் படிக்க எனக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது.

நான் ஒரு ஆசிரியரின் மனைவி என்ற முறையில் மாணவர்களுக்கு ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன்.

மாணவர்களாகிய நீங்கள் தான் உங்கள் ஆசிரியரின் கோப, தாபத்திற்கும், கஷ்டத்திற்கும் காரணமாயிருக்கிறீர்கள். பலவித தொல்லைகளில் அவதிப்படும் ஆசிரியரோ அல்லது ஆசிரியரின் மனைவியோ உங்கள் பரீக்ஷை பேப்பர்களுக்கும் மார்க்குகளுக்கும் பொறுப்பாளி அல்ல.

ஒரு ஆசிரியரைப் பற்றியோ, அவருடைய மனைவியைப் பற்றியோ எந்தச் சமயத்திலும் கண்யக் குறைவாக எண்ணாமல் நீங்கள் நன்றாகப் படிப்பதன் மூலம்தான் நல்ல மார்க்குகள் வாங்க முடியும். அதை விட்டு விட்டு, இதற்கு ஆசிரியரின் வீட்டில் இருக்கும் நிலைமைதான் காரணம் என்று நினைப்பது சரியல்ல. இதை ஒவ்வொரு மாணவனும் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே இந்தக் கடிதத்தை எழுதினேன். இப்படிக்கு, மாணவர்களின் முன்னேற்றத்தில் மிகவும் விருப்பமுள்ள ஒரு ஆசிரியரின் மனைவி:

பெருந்துறை
10—2—50 எஸ். சீதாலக்ஷ்மி

---

● வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ "பொதுஜனமும் அந்தப்புரமும்" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ வெங்கடாச்சாரிக்கும், "கோத்திரம்" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ என். வி. துரைசாமிக்கும் ரூ. 12-8-0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

இவ்விதம் நமக்கும் நம் நாட்டுக்கும் வழி காட்ட ராஜாஜிக்கு ஆண்டவன் நீண்ட ஆயுளைக் கொடுக்கும்படி பிரார்த்திப்போமாக.

மயிலாப்பூர்
1—2—50 எஸ். கிருஷ்ணமூர்த்தி

★

## கோத்திரம்

மனமொத்த ஒரு பெண்ணும் பிள்ளையும் சேர்ந்து வாழவொட்டாமல் தடுத்து அவர்கள் வாழ்வைப் பாழ்படுத்துவதில், செவ்வாயும் ஜாதகங்களும் எப்படிக் காரணமாகின்றனவோ, அதைவிட அதிகப் பங்கு வகிக்கிறது கோத்திரம் என்னும் அர்த்தமற்ற கோட்பாடு.

குறிப்பிட்ட இரு குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணுக்கும் பிள்ளைக்கும் வயது, கல்வி, சமமான குடும்ப அந்தஸ்து முதலிய எல்லாப் பொருத்தங்களும் இருக்கின்றன. அத்துடன் அவ்விருவரும் குழந்தைப் பருவம் முதல் ஒன்றாகப் பழகி ஒருவர் குணம் மற்றவருக்குப் பிடித்தமாயும், பரஸ்பரம் நேயமுடையவர்களாயுமிருக்கிறார்கள். இத்தனையும் இருந்தும், அக்குடும்பத்தார் இருவரும் ஒரே கோத்திரம் என்ற ஒரு காரணத்தால் மட்டும் அக்கலியாணம் தடை செய்யப்பட்டு விடுகிறது!

ஒரு தந்தையின் மக்கள் எல்லாரும் சகோதரர்களாவது போலவே, ஒரு ரிஷியின் வம்சத்தில் வந்தவர்கள் எல்லாரும் ஒரே குடும்பத்தினராகவும், சகோதரர்களாகவும் கருதப்படுகிறார்களாம்! ஆகையால் ஒரு கோத்திரத்தவர்கள் எல்லோரும் ஒரே ரத்த சம்பந்த முடையவர்களாம்! எனவே சகோத்திரத்தில் கலியாணம் செய்து கொள்வது, அண்ணனும் தங்கையும் மணம் புரிந்து கொள்வது போலாகுமாம்!

நினைவுக்கு எட்டும் தலைமுறை வரையில் எவ்வித உறவோ தொடர்போ இல்லாது முற்றிலும் பரிச்சயமற்ற இரு தரப்பினர், கோத்திரம் ஒன்று என்பதால் மட்டும் எப்படி ரத்த சம்பந்த முள்ளவர்களாக ஆவார்கள் என்பது பகுத்தறிவிற்கும் எட்டாத விசித்திரம்! அதைவிட விசித்திரமானது, இக்கோத்திர விஷயமாகச் சிலர் கையாளும் பரிகார முறை! எக்காரணம் பற்றியாவது சகோத்திரத்திலேயே விவாகம் செய்ய விரும்பினால், அதற்கு ஒரு புதிய பரிகார முறையை இப்போது கையாளத் தொடங்கியிருக்கிறார்கள்! அதாவது, விவாகச் சடங்கு ஆரம்பிக்கப் படுமுன், மணமகளை அவள் தாய் மாமனுக்கோ, அல்லது வேறு கோத்திரத்தைச் சேர்ந்த வேறு யாருக்கோ, மந்திர பூர்வமாகச் சுவீகாரம் கொடுத்து விடுவது தான்! அப்போது பெண் வேறு கோத்திரத்தவளாகி விடுகிறாள்! ஒரு கோத்திரத்தவர்கள் எல்லோரும் ஒரே ரத்த சம்பந்த முடையவர்கள் எனப்படுவதை உண்மையாகக் கொள்ளுவதாயிருந்தால், இப்படிக் கேவலம் சங்கல்பத்தால் மட்டும், அதுவரை அவள் உடலில் ஓடிக்கொண்டிருந்த ரத்தம் மாறிவிடுமா? நம்முடைய பகுத்தறிவை நாமே ஏமாற்றிக் கொள்வது என்றுதானே இதைச் சொல்ல வேண்டும்!

எவ்வித சம்பந்தமும் அற்ற இருவரை, ஒரே கோத்திரம் என்று விலக்கும் இதே சாஸ்திரக்காரர்கள் ஒரே தலைமுறையைச் சேர்ந்தவர்களும் மிக நெருங்கிய சம்பந்த முடையவர்களுமான அத்தான்—அம்மங்கார் போன்றவர்கள் விவாகத்தை மட்டும் ஆதரிக்கின்றனர். ஏன், பெண் தன் தாயின் உடன் பிறந்த சகோதரனாகிய மாமனைக்கூட மணக்கலாம்! ஏனென்றால் அவர்கள் வெவ்வேறு கோத்திரத்தினராம்!

சகோத்திர விவாகத்தை இப்போது அரசாங்கம் கூடச் சட்ட பூர்வமாக ஆதரித்து விட்டது. ஆனால் நம்மவர்களும் மனப்பூர்வமாக ஒத்துக்கொள்ளும் நாள் எந்நாளோ! எந்தக் காலத்திலோ, எந்தச் சூழ்நிலையிலோ இயற்றப்பட்ட சாஸ்திரங்களை, இப்போது அவை முற்றிலும் பொருத்தமும் அர்த்தமும் இல்லாமல் போயும்கூடக் கைவிட மனம் துணியாமல், அப்படியே பின்பற்றி வருவது வெறும் மூட நம்பிக்கை அல்லவா?

பல்மநேர்
5—2—50 என். வி. துரைசாமி

★

## இம்மாதிரி தவறு...

டைகர் வரதாச்சாரியார் அவர்கள் காலஞ்சென்றதைக் குறித்து சங்கீத வித்வான்களும் சங்கீத ரஸிகர்களும் மிகவும் வருந்துகின்றனர். அனுதாபத்தைத் தெரிவித்துப் பேசியும் எழுதியும் இருக்கிறார்கள். எல்லோரும், அவருடைய குரலை ஒலிப் பதிவு செய்யவில்லையே என்று மிகவும் வருந்துகிறார்கள். சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன், "டைகர்" மியூஸிக் அகாடமியின் சர்ச்சையின் பொழுது, "மாஞ்சி" ஆலாபனை செய்ததைக் கேட்டுப் பரவசமடைந்த வித்வான் எஸ். வி. பார்த்தசாரதி, அவர் பாடுவதை ஒலிப்பதிவு செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை.

எது குறைகளுக்கும் கஷ்டங்களுக்கும் இந்த சர்க்கார்தான் காரணம் என்று எண்ணும்படி எங்களிடம் சொல்லப்படு கிறது. நாங்கள் எங்களது வேலைகளை எப் பொழுதும் போலவே செய்கிறோம். ஆனால் எங்கும் எங்களைத்தான் குறை கூறுகிறார்கள். நாங்கள் என்ன செய்வோம்?"

பொதுஜனம் சொல்லுவது உண்மை தானே! குருவியின் தலையில் பனங்காயை வைத்தது போல, குடியரசுக் குழந்தை வளர்ந்தே பிறந்து விட்டது. பிறந்து வளர்ந்தால் அல்லவா தாய் சமாளிக்க முடி யும்? கொஞ்சம் கருணையோடு யோசிக்க வேண்டும். எடுத்ததற் கெல்லாம் பத்திரி கைகளும் ஆளும் கோஷ்டியாரும் பொது ஜனத்தையே தாஷித்துக் குறை சொல்லக் கூடாது. அன்றாடப் பிரச்னைகள் குடித் தனக்காரனைப் பயமுறுத்தி வருகின்றன. இந்நிலையில் அவன் மனம் தத்தளிக் கிறது. மேலும் அவனைக் குறை கூற எங்கும் ஆட்கள் புறப்படுவது யாருக் கும் நல்லதல்ல. எது எப்படியிருந்தாலும் பத்திரிகைகள் பொதுஜனத்தின் சிரமத் தைச் சொல்ல வேண்டும். எடுத்த காரி யத்திற் கெல்லாம் பொதுஜனம் கவனிக்க வேண்டுமென்ற சம்பிரதாயப் பேச்சை வைத்துக் கொள்ளக் கூடாது.

விட்டலாபுரம்
5—2—50 வெங்கடாச்சாரி



## சர்வோதய தினத்தில்

**1950**-ம் ஆண்டு ஜனவரி 26உ இந்திய சரித்திரத்திலேயே ஒரு புனித தின மென்றால், ஜனவரி 27உ சென்னை மாகா ணத்துக்கு விசேஷ தினமென்று சொல்ல வேண்டும். அன்றுதான் நமது அரும் பெரும் தலைவர் ராஜாஜி தமிழ் நாடு திரும்பிய தினமாகும். ஸர் வால்டர் ஸ்காட் கூறிய படி எந்தப் பிராணிதான் தன் சொந்த இருப் பிடம் திரும்பியதின் பொருட்டுச் சந்தோஷ மடையாமலிருக்க முடியும்? அன்று விமான நிலையத்தில் கூடிய கூட்டம் அவர் நம்மை எவ் வளவு தூரம் அன்பினால் கவர்ந்து விட்டார் என்பதற்கு ஒரு சான்றாகும். அதைத்தான் அவரும் அன்று கூறினார். அன்று மட்டுமல்ல. 30உ திங்கள் கிழமை மாலை ராஜாஜி மண்ட பத்தில் நடைபெற்ற சர்வோதய தினக் கூட்டத்திலும் அதைத் தெளிவு படுத்தினார்.

அன்றைய நிகழ்ச்சியைச் சென்னை வாசிகள் மட்டுமல்ல, தேசம் பூராவும் அதைக் கேட்டு மகிழ ரேடியோக்காரர்கள் ஒலிப் பதிவுசெய்து அஞ்சல் செய்தனர்.

"அன்பு என்பது மனிதனுடைய மனதி லுள்ள அழுக்குகளைப் போக்கக்கூடிய ஒரு புனித தீர்த்தம். மக்கள் அன்பைக்கொண்டு தான் தங்கள் கடமையில் வெற்றியடைய முடியும். அதற்கு மகாத்மா ஒரு எடுத்துக் காட்டாக விளங்கினார். அந்த அன்பு என்ற அஸ்திரத்தைக் கொண்டுதான் அஹிம்ஸா முறையில் அன்னியர்களை வெற்றிபெற்ற தோடு, அவர்களுடைய புகழுக்கும் பாத்திர மானார். சர்வோதய தினம் மக்களுக்கு ஒரு ஞாபக தினம். சிராத்த தினமும்கூட. மகாத்மா எதற்காக அவதரித்து, எதன் பொருட்டுத் தம் உயிரைத் தியாகம் செய் தார்? அந்த லட்சியத்தை நாமும் ஞாபகப் படுத்திக்கொண்டு அதைக் கடைப்பிடிக்க வேண்டும். அன்புதான் மக்களுடைய மனதின் திறவுகோல். அந்தத் திறவுகோலைக் கொண்டு திறந்தால்தான் நம் மனதில் சத்தியமயமாக மென்னும் பொக்கிஷத்தைக் காணலாம். நாம் அனைவரும் காந்திஜியின் பொன்மொழி களைப் பின்பற்றி நம் நாடு சுபிட்சமடைய முயல வேண்டும். அவருடைய வழி ஒன்று தான் முன்னேற்றத்திற்கு அடிப்படை. இப் புது யுகத்தில் நாம் காந்தி அவர்க ளுடைய வழியைப் பின்பற்றுவோமாக. எம்மதமும் ஒன்றே. எல்லா வழிகளும் ஆண்டவன் சன்னிதானத்திற்குத்தான் செல்கின்றன. இதுதான் மகாத்மாவின் அற வுரை" என்று ராஜாஜி எடுத்துரைத்தார்.




ரேஷன் ஆபீஸ் கிளார்க்:—உம் முடைய உத்தியோகம் என்ன?




## பொதுஜனமும் அதிருப்தியும்

முன்னம் ஒரு "கல்கி" இதழில் ஸ்ரீமான் 'அதிருப்தி'யாரைப் பிடித்து வெளு வெளு என்று வெளுத்திருந்தது. தேசத்தில் எது கிடை பெறவில்லையானாலும் கவலையில்லை; பாரத தேசத்தின் சுதந்திரம் எல்லாவற்றிலும் சிறந்தது என்று சொல்லப்பட்டிருந்தது. உண்மை, அதில் வேகத்தோடு வெளிப்பட்டது. அந்த உண்மையைச் சாதாரண கிராமவாசி, 'பாமர மக்கள்' உணர்ந்து விட்டால் எந்தத் தொல்லையும் கிடையாது. அவனை எப்படி உணரும்படி செய்வது?

இப்பொழுது இந் நாட்டில் எங்கும் அதிருப்தி நிலவுகிறது. இதற்குக் காரணம் பத்திரிகைகள் என்று மந்திரிகள் சொல்கிறார்கள். சர்க்கார் செய்யும் நிர்மாண காரியங்களைப் பத்திரிகைகள் எடுத்துச் சொல்வதில்லை என்று குறைப்படுகிறார்கள். உண்மையில் பத்திரிகையில் வெளிவருவதென்ன? எப் பக்கம் பார்த்தாலும் மந்திரிகளின் உபதேசங்கள், சர்க்கார் நிபுணர்களின் கட்டுரைகள், கோடிக்கணக்கான புள்ளி விவரத் திட்டங்கள் இவைகள்தான். இது போக, பொதுஜனம் அப்படிச் செய்ய வேண்டும், இப்படி உழைக்க வேண்டும் என்ற பட்டியலும் குறைகளும் அடங்கிய தலையங்கங்களையும் பத்திரிகைகளிலேயே பார்க்கலாம். இவற்றைப் படிக்கும்போது இந்த நாட்டில் உள்ள கஷ்டங்களுக்கெல்லாம் பொதுஜனங்களின் அசிரத்தையே காரணம் என்று தோன்றும்.

உண்மையாகவே பொதுஜனம் சோம்பேறியா? நாட்டுப் பற்று இல்லாதவனா? யார் ஐயா, அந்தப் பொது ஜனம்?

கட்சிப் பிரமுகர்கள் பிரசங்கம் செய்யத் தேடி வருகிறார்களே, அது இந்தப் பொது ஜனத்தைத் தேடித்தான். சர்க்காருக்கு உப்பிலிருந்து கற்பூரம் வரை வரி கொடுக்கிறவன் இந்தப் பொதுஜனம்தான். கிராமத்திலே நடக்கும் விழாக்கள், ஆலய வழிபாடுகள், அம்மன் கோவில் கொடைகள் யாவற்றுக்கும் வரி கொடுப்பவன் இவன்தான். முதியோர் கல்வி நிதி, ஆந்திர புயல் நிவாரண நிதி, அகதிகள் நிதி என்று சர்க்கார் பிரிக்கும் அத்தனை நன்கொடை நாடக டிக்கட்டுக்கும் முணகிக் கொண்டோ முணகாமலோ காசு கொடுப்பவன் இவனே. எப்பொழுதும் 'எட்டய்யாவையும் ஓ. மு அய்யாவையும் சரிக்கட்டிக் கொண்டுதான் போக வேண்டும்' என்ற உண்மையை அறிந்தவன் இவன். இத்தகைய நிலை சுதந்திரம் ஏற்படுவதற்கு முன்பு மிருந்தது. இன்றும் இருக்கிறது. என்றும் அப்படியிருந்தாலும் 'பொதுஜனம்' கவலைப்பட மாட்டான்.

அப்படியானால் நாட்டில் எங்கும் மொட்டை மனுக் கிளம்புகிறதே! அதிருப்தி தெரிகிறதே! ரேஷன் கடையில் அரிசி கிடைக்காவிட்டால் 'சர்க்கார் ஒழிக' என்கிறார்களே, ஓ. மு கூப்பனுக்குக் காசு வாங்கினால் 'நேரு சர்க்கார் ஒழிக' என்று ஊர்வலம் வருகிறதே! இதையெல்லாம் அந்தப் பெயர் பெற்ற பொதுஜனம் செய்வதல்லவா? என்று கேட்கலாம். இப்படிப் பொதுஜனத்திடம் கேட்டால் அவர் என்ன சொல்கிறார், என்றால்:

"லஞ்சம் கொடுக்காதே என்று எங்களிடம் சொல்கிறார்கள். உதாரணமாக, எங்கள் நிலத்துக்கு உரம் வேண்டும். முன்பெல்லாம் கடைகளில் கிடைக்கும். இப்பொழுது விவசாய ஆபீஸரிடம் போகவேண்டியிருக்கிறது. அவர் கணக்குப்பிள்ளை சர்டிபிகேட் கேட்கிறார். கணக்கய்யாவுக்குக் காசு கொடுக்காவிட்டால் சர்டிபிகேட் கிடைக்காது. தர்மத்தைப் பார்த்தால் எங்கள் பிழைப்புப் போச்சு. பிழைப்பைக் கவனித்தால் 'எல்லாம் இந்தப் பொது மக்கள்' என்று திட்டுகிறார்கள். வண்டியைப் போட்டுக்கொண்டு அல்லவா வண்டிக்குள் ஆட்களை உட்காரச் சொல்ல வேண்டும்? வண்டிக்குள் ஏறச் சொல்கிறார்கள். அப்புறம் மாடு பூட்டவில்லையே கீழே இறங்கு என்றால் ஆட்கள் என்னய்யா செய்யும்?

"சர்க்கார் இயந்திரத்தைச் சரி செய்து கொண்டு அப்புறம் இந்தக் கட்சிகளெல்லாம் எங்களிடம் பிரசாரம் செய்ய விட்டு விட்டால் நாங்கள் எதையும் சமாளிப்போம். இப்பொழுது என்னடா வென்றால், எங்க

வளம் மிகுந்த பிரதேசங்கள் விவசாயம் செய்வாரின்றிக் காடுகளாகி வருகின்றன. விவசாயம் செய்ய ஊக்கமுடையவர்களுக்கு நிலமில்லை. இந்த நிலைமைக்கு முற்றுப் புள்ளிவைக்க இலங்கை அரசாங்கம் கூடிய சீக்கிரம் ஒரு சட்டம் செய்ய விருக்கிறது. அதன்படி விவசாயம் செய்யாமல் தரிசாகக் கிடக்கும் நெல் வயல்களை அரசாங்கம் ஸ்வீகரித்து அதைக் குடியானவர்களிடம் குறைந்தது ஐந்து வருடக் குத்தகைக்கு விடப் போகிறது. அவ்வாறு ஸ்வீகரிக்கும் நிலங்களின் சொந்தக்காரர்களுக்கு விளைச்சலில் ஒரு பகுதி கொடுக்கப்படும். இந்தச் சட்டத்தினால் நெல் சாகுபடியை வெகுவாகப் பெருக்க முடியுமென்று சர்க்கார் கருதுகிறார்கள்.

## இந்திய சர்க்கார் உதவி

இலங்கையைச் சேர்ந்த ஆறு மாணவர்களுக்கு இந்தியாவில் உயர்தரக் கல்வி பயில இந்திய அரசாங்கம் தலைக்கு மாதம் நூறு ரூபாய் வீதம் உபகாரச் சம்பளம் கொடுக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். இதில் இலங்கையிலே நிரந்தரமாகக் குடியேறி யிருக்கும் இந்தியர்களான நான்கு மாணவர்களுக்கும் இரண்டு இலங்கை மாணவர்களுக்கும் உபகாரச் சம்பளம் கொடுக்கப்படும். இதே போல சென்ற வருடமும் ஆறு இலங்கை மாணவர்களுக்கு இந்தியாவில் உயர்தரக் கல்வி பயில உபகாரச் சம்பளம் கொடுக்கப்பட்டது. இந்திய அரசாங்கம் அண்டை நாடுகளுடனுள்ள கலாசார நேச உறவுகளை வளர்ப்பதற்காகவே இந்த உபகாரச் சம்பளத் திட்டத்தை ஏற்படுத்தி யுள்ளது.

## பூஜைக்குக் காணிக்கை

சுதந்திர இலங்கை சுதந்திர இந்தியக் குடியரசுக்கு ஒரு அற்புதமான வெகுமதியை அடுத்த வாரம் அனுப்பிவைக்கப் போகின்றது. ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தின் அருகில் இஸி பட்டணம் என்று புராதனச் சரித்திரப் பெருமை வாய்ந்த ஊர் இருக்கிறது. அங்குதான் புத்தபகவான் நிர்வாண நிலையை அடைந்தார். ஆகையால் அவ்வூரைப் பௌத்தர்கள் புத்த மதத்தின் மூலஸ்தானமாகக் கருதுகிறார்கள். அந்த ஊருக்கு இரண்டு அடி உயரமும் பதினறு பவுண்டு நிறையுமுள்ள அற்புத வேலைப் பாடுகள் அமைந்த வெள்ளிப் பேழையைப் பதினெட்டு பௌத்த யாத்ரீகர்கள் அடுத்த வாரம் கொண்டுபோகிறார்கள். தங்கமுலாம்



"இந்தக் காரை விற்கப் போகிறீர்கள் என்று கேள்விப்பட்டேன். கார் என்ன விலை, ஸார்?"

"ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் தான், ஸார்!"

"ஹாரனைச் சேர்க்காமல் கார் என்ன விலைக்குக் கொடுப்பீர்கள்?"

"ஆயிரத்து நானூற்றுத் தொண்ணூறு ரூபாய் கொடுங்கள் போதும்!"

"அந்த ஹாரனின் சத்தம் கேட்கச் சகிக்கவில்லை. இந்தாருங்கள் பத்து ரூபாய். அந்த ஹாரனைக் கழற்றிக் கொடுத்து விடுங்கள்!"

பூசி ஆங்கிலம், சிங்களம், ஹிந்தி, பர்மிய பாஷைகளில் ஸ்ரீ லங்கா என்று எழுதப்பட்ட அப்பேழை களுத்துறையைச் சேர்ந்த ஒரு பிரபல சிங்கள வியாபாரியின் நன்கொடையாகும். சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட புத்தரின் சின்னங்களைப் பத்திரப்படுத்திவைத்துப் பூஜிக்க இந்த வெள்ளிப் பேழை உபயோகிக்கப்படுமாம்.

## புத்த பகவானின் பல்

கண்டியிலுள்ள தலதாமாளிகாவை என்ற பௌத்த ஆலயத்தில் பகவான் புத்தரின் புனிதப் பல் பல நூற்றாண்டுகளாக வைத்துப் பூஜிக்கப்படுகிறது. அதைப் பர்மியப் பிரதம மந்திரி தாக்கின் நூ பர்மாவில் சிலகாலம் வைத்திருந்து பூஜிப்பதற்காக வாங்கிப் போயிருக்கிறார். மனித அறிவிற்கு எட்டிய மட்டில் இந்தப் பௌத்தச் சின்னம் இலங்கைக்கு வெளியே கொண்டு போகப்படுவது இதுதான் முதல் முறையாகும். இரண்டு மாதங்களுக்குப் பின்னர் இலங்கைப் பிரதமர் சேனநாயகா பர்மாவிற்கு நேரில் சென்று அதைத் திருப்பி வாங்கி வருவாரென்று எதிர்பார்க்கப் படுகிறது.

# புத்த மகான் பூஜைக்குக் காணிக்கை

**ரஜனி**

கொழும்பு, பிப்ரவரி 10.

இவ் வருடம் இலங்கையின் சுதந்திர தினம் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அதில் இந்தியர்களும் பரிபூரணமாகக் கலந்து கொண்டது விசேஷமாகக் குறிப்பிடத் தகுந்தது. சேனநாயகா சர்க்காருடன் எவ்வளவு அபிப்பிராய வேற்றுமைகள் இருந்த பொழுதிலும், தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு திருவிழாவைக் கொண்டாடுவதில் அந்தத் தகராறுகள் தலையிடுவதை அனுமதிக்க இந்திய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ராஜலிங்கம் தயாராயில்லை. இலங்கையில் பூரண பிரஜா உரிமை கோரும் இந்தியர்கள்,—இந்த நாட்டின் வாழ்வு தாழ்வுகளிலே சமமான பொறுப்பு ஏற்க விரும்பும் இந்தியர்கள் தேச விடுதலைக் கொண்டாட்டத்திலும் பங்கு பற்ற வேண்டும் என்பது அவரது கருத்து. எனவே, காங்கிரஸ் தலைவரின் ஆக்ஞைக் கிணங்க தோட்டங்கள் தோறும் இந்தியத் தொழிலாளர் சுதந்திர தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். அனேகம் இடங்களில் இந்தியக் குடியரசின் மூவர்ணக் கொடியும் சிங்கக் கொடியும் சேர்ந்து பறக்க விடப்பட்டன.

## காந்தி மண்டபம்

இந்தியாவின் விடுதலைக்கு மாத்திரமல்லாமல் அகில ஆசியாவின் விடுதலைக்கும் வழிகாட்டியாயிருந்த அமரர் காந்திஜியின் பெயரில் இலங்கை சுதந்திர தினத்தன்று ஒரு ஞாபகார்த்த மண்டபம் இங்கு திறந்து வைக்கப்பட்டது மிகவும் பொருத்தமானது. மாவுசா தோட்டத்தில் அதன் சொந்தக்காரரான ஒரு ஐரோப்பியரின் உதவியுடன் அமைக்கப்பட்ட மகாத்மா காந்தி ஞாபகார்த்தக் கட்டிடத்தை இந்திய ஹைகமிஷனர் ஸ்ரீ வி. வி. கிரி திறந்து வைத்தார்.

மாத்தளை பஸ்ஸ்டாண்டில் ஸ்ரீ காரியக்கார என்ற ஒரு சிங்கள பார்லிமெண்டு அங்கத்தினரின் தலைமையில் இந்தியர்கள் இலங்கை சுதந்திர தினத்தைக் கொண்டாடினார்கள். இதுபோன்ற கூட்டங்கள் நாட்டில் வகுப்பு ஒற்றுமையை வளர்க்க உதவுமென்றும், சர்க்காருடன் ஒத்துழைக்க இந்திய காங்கிரஸ் இப்பொழுது முயன்று வருவது மிகுந்த மகிழ்ச்சியைத் தருவதாயும், பிரஜா உரிமைக்கு மனுச் செய்யும் இந்தியர்களுக்கு இயன்ற உதவிகளை யெல்லாம் செய்வதாயும் ஸ்ரீ ரணயக்காரா குறிப்பிட்டார். இலங்கைக்கு உள்நாட்டிலிருந்தோ அல்லது வெளிநாட்டிலிருந்தோ ஆபத்து ஏற்படுமாயின் அப்பொழுது இலங்கை சர்க்காருடன் மனப்பூர்வமாக ஒத்துழைத்துப் பொது எதிரியுடன் போராட இந்தியர்கள் கொஞ்சமும் தயங்க மாட்டார்கள் என்று மாத்தளை ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் உறுதி கூறினார்.

## இந்தியர்களின் பெருந்தன்மை

சென்ற வாரம் இலங்கை பார்லிமெண்டில் ஒரு இடதுசாரி மெம்பர் சர்க்கார் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்த பொழுது 17 இடதுசாரி மெம்பர்கள் தீர்மானத்தை ஆதரித்து வோட்டுக் கொடுத்தார்கள். ஆனால் இலங்கை இந்திய காங்கிரஸ் அங்கத்தினர்கள் மட்டும் தீர்மானத்தை ஆதரிக்காமல் நடுநிலைமை வகித்தனர். அதி முக்கியமான ஒரு தீர்மானத்தில் அவர்கள் நடுநிலைமை வகித்தது கண்மூடித்தனமாக எப்பொழுதும் அவர்கள் இடதுசாரிக் கட்சியை ஆதரிக்கின்றனர் என்ற புகாரைப் பொய்யாக்கி விட்டது. அதன் விளைவாக இலங்கை—இந்தியா சௌஜன்ய உறவு பலம்பெற்றதாகக் கருதப்படுகிறது. இந்தியர் காங்கிரஸ் காட்டியுள்ள இந்த நல்லெண்ணத்தைப் பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகா வரவேற்று இந்திய சமூகத்துக்குப் பெருந் தன்மையுடன் நியாயம் வழங்க முன் வருவாரா?

## அரிசிக் கஷ்டம் தீரவழி

இலங்கை ஒருகாலத்தில் கீழ்த்திசையின் தானியக் களஞ்சியமென்று புகழ்பெற்றிருந்தது. அந்த இலங்கை இன்று அன்னிய நாடுகளிலிருந்து வரும் அரிசிக் கப்பல்களை நம்பி உயிர்வாழ வேண்டியிருக்கிறது. இதற்கு முக்கிய காரணம் பூமியின் வளம் குறைந்து விட்டதல்ல. இலங்கையில்



மானாலும் ஏற்படலாம். என் இடம் மாடியில். வீட்டுக்குப் போகும் போதும் மாடியிலிருந்து இறங்குகையிலும் மரணம் ஏற்படலாம். டிராமில் போகும் போதும் அந்தச் சம்பவம் ஏற்படலாம். அப்படி நேர்ந்தால் நான் அனாதையாகவா இறப்பது? இதற்காகவே என் விலாசம் எழுதிய காகிதத்தையும் வைத்துக் கொண்டேன். அதைக் காண்பவர்கள் அதுவும் தெரியும், நேரும் காண்பவர்கள் உடனே என் தீர்க்க தர்சனத்தை ஒருவாறு அறிந்து கொள்வார்களல்லவா? ஆகவே எனக்கு எப்படியாகிலும் புகழ் கிடைக்குமல்லவா?

'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.'

என்று வள்ளுவர் கூறியிருக்கிறார் அல்லவா? புகழ்தான் கிடைக்கப் போகிறதே! இன்னும் என்னவேண்டும்? பிறர் மரணத்தைப் பிரமாதமாக எண்ணிக் கவலைப்படாத என் மனம் என் மரணத்தைக் கண்டும் அஞ்சவில்லை. அதை நான் மனமார விரும்பினேன்; வருந்தி அழைத்தேன்.

ஆமாம், ஐயா ஆமாம்! அண்ணன், தம்பி இருவர் சம்பாதித்தும் சரியாகக் குடும்பம் நடத்த முடியவில்லையே, நான் இறந்து விட்டால் அண்ணன் ஒருவன் சம்பாதிப்பத்தில் எப்படிச் சமாளிக்க முடியும் என்பதைப் பற்றிச் சிறிதும் எண்ணவில்லை. என் உயிரை இரண்டாயிரத்துக்கு இன்ஷ்யூர் செய்திருக்கும் 'அரோகரா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி'யைப் பற்றியும் நினைக்கவில்லை.

மனைவி விஷயம் என்ன என்று கேட்கிறீர்களா? நான் பிரம்மச்சாரி என்பதைத் தெரிவித்து விடுகிறேன்.

'என் மரணம், அதனால் புகழ்' இதைப் பற்றித்தான் நான் எண்ணி ஆனந்தமடைந்து வந்தேன். அந்த ஆனந்தத்தில் என் இருதய வலியைப் பற்றிச் சிறிது மறந்தும் இருந்தேன் என்றால், நான் மரணத்தை எத்தனை ஆவலுடன் எதிர்கொண்டு அழைத்தேன் என்பது தெரிந்துவிடும்.

மணி நாலரை ஆயிற்று. ஆபீஸ் பைல்களையெல்லாம் நடமாடியவாறே அடுக்கி வைத்துவிட்டுப் புறப்பட்டேன். ஒவ்வொரு படியாகக் கால் வைத்து இறங்கும்போதும் இந்தப் படியில் 'யமன்' இருக்கிறானே என்று எண்ணியபடியே இறங்கினேன். தன் பாசத்தை வீசி என்னைப் படியிலிருந்து உருண்டு விழுந்து விடும்படி இழுப்பான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். வலிக்கும் இருதயம், இந்தப் படியில் கால் வைக்கும்போது 'டக்' கென்று வேலை செய்வதை நிறுத்தி விடும் என்று பரிபூரணமாக நம்பினேன்.

ஆனால் என்ன ஏமாற்றம்! யமனின் வாடையே அந்தப் பக்கம் வீசவில்லை. கீழே இறங்கியதும் இருதய வலி கொஞ்சம் குறைந்தாற் போலிருந்தது. அந்த வலி யெல்லாம் தலைவலி, சுரத்துடன் நாற்காலியில் உட்கார்ந்திருந்ததால் ஏற்பட்டது என்று ஊகித்தறிந்தேன். எனக்காவது 'ஹார்ட் பெய்லூ'ராவது. பிராணாயாமம் செய்யும் எனக்கா?

அப்புறம் என்ன என்கிறீர்களா? வீட்டுக்கு வந்ததும் தலைவலி, சுரம், எல்லாம் வந்து விட்டன. இரண்டு மாதம் படுத்திருந்து பிறகு ஆபீஸ் போனேன். முதல் பத்து நாட்கள் வெகுவாக வாட்டியது. வீட்டில்கூடப் பயப்பட்டார்கள்.

ஆனால் எனக்கு முதலில் மரணத்தினிடம் கொண்ட ஆர்வம் வரவரக் குறைய ஆரம்பித்தது. மரணம் வந்தால் மனமுவந்து ஏற்கத் தயார்தான். ஆனால் அதை வருந்தி அழைக்கவில்லை. கூட்டோடு கூடாக அன்றே வராத அந்த மரண தேவதை, ஆறின பழங் கஞ்சியாய் வந்தால் என்ன? வராவிட்டால்தான் என்ன? அந்தப் பழைய புகழ் வருமா? ஏதோ, 'நல்ல மனுஷன், போய் விட்டான்' என்று அனுதாபப் படுவதுடன் சரி. அதற்காக என் பெற்றோர், உற்றோரைத் தவிக்க விட்டு, இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்கு நஷ்டத்தை உண்டாக்கி விட்டு ஏன் மரணமடைய வேண்டும்? ஆகவே, இப்படிப்பட்ட மரணம் எனக்கு வேண்டாம்.

கடைசியில் மிருத்யுவின் வாசலிலிருந்து பத்திரமாய் உள்ளே வந்து விட்டேன். பிழைத்து விட்டேன்.

உங்கள் துரதிர்ஷ்டம், இன்னும் என்னுடைய எத்தனையோ கதைகளைப் படித்துத் தொலைக்க வேண்டியிருக்கிறது.

ஆனால், 'பார்ப்போம், அடுத்த சான்ஸ் வராமலா போகிறது' என்ற தைரியமும், நம்பிக்கையும் இல்லாமல் போகவில்லை!

“ஒன்றுமில்லை. மறக்காதீர்கள்...அவ்வளவுதான்” என்றேன்.

டிராமில் சந்தித்த ராமரத்னம், “அடுத்த மாசம் திருவையாறு உற்சவம், லீவ் போட்டு விட்டுப் போகலாமா?”, என்று பிரஸ்தாபித்தார்.

“‘இன்றைக் கிருப்பாரை நாளைக் கிருப்பரென்றெண்ணவோ இடமில்லை’ அதனால் அடுத்த மாசம் வரட்டும் பார்த்துக்கலாம்” என்றேன்.

இப்படியேதான் சந்தித்த பேர்களிடமெல்லாம், ‘என் மரணத்தை’ப் பற்றிச் சூசகமாகத் தெரிவித்து வைத்திருந்தேன்.

ஆபீஸில் வேலை செய்து கொண்டிருந்தேன். பன்னிரண்டு மணி இருக்கும். தலை என்னவோ சுற்றுவதுபோல் இருந்தது. தலைவலி பிடித்துக்கொண்டு விட்டது. அத்துடன் மெள்ள சுரம். அன்று மத்தியானம் ‘லங்கணம்’தான். அருமையாகக் கொண்டு வந்த எலுமிச்சை ரஸம் சாதத்தை ஹோட்டல் டிபன் சாப்பிடும் பக்கத்து ‘ஸீட்’ நண்பனுக்குக் கொடுத்து விட்டேன். நன்றா யிருக்கிறதென்று சப்புக் கொட்டிக் கொண்டு சாப்பிட்டான். எனக்கு அப்போது பொறுமையாயிருந்தது. இதன் காரணமாக அவனுக்கு வயிற்று வலி வந்ததோ என்னமோ தெரியாது!

இதைக் கேளுங்கள். மத்தியானம் மணி மூன்று அடித்ததும் இருந்தாற் போலிருந்து இதயம் வலிப்பதுபோல் இருந்தது. உடம்பு அனலாய்க் கொதித்தது. தலை கனத்தது. என்னால் ஒரு வேலையும் செய்ய முடியவில்லை. அப்படியே நாற்காலியில் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்தேன். சில சமயம் அப்படி உட்கார முடியாமல் நாற்காலிக் கைப்பிடியில் கையை ஊன்றிக் கொண்டு குனிந்தவாறு உட்கார்ந்தேன். ஆபீஸ் முடிய இன்னும் ஒரு மணி நேரம் இருந்தது. அந்த ஒரு மணி நேரத்திற்காக யாராவது போய் லீவ் கேட்பார்களா? அன்றைய தினத்தை அப்படியே கடத்தி விடுவது என்று தீர்மானித்து உட்கார்ந்து விட்டேன். திடீரென்று என் ‘கனவு’— என் மரணம் — ஞாபகத்துக்கு வந்தது. வந்தது தான் தாமதம். என் மூளை குழம்பிற்று. என் கனவுக்கும்—இந்த உடல் அசௌக்கியத்துக்கும் சம்பந்தம் இல்லையா? இருக்கவே இருக்கிறது என்று தீர்மானமாக நம்பியது என் மனம். அப்படியானால் நான் மரணமடைய வேண்டியதுதானா? வாழ்நாள் இன்றுடன் சரியா?



என் இதயம் வலிக்க ஆரம்பித்தது அதிகமாயிற்று. மூச்சுக்கூடத் திணறுவது‘போல்’ இருந்தது. என் மனம் கற்பனை செய்வதே ஒரு தனி விதம். யாருக்காவது உடம்பு சரியில்லை என்றால் என் கற்பனைக் குதிரை யமனைத் தேடித்தான் ஓடும். ஓடி அழைத்து வந்து உடம்பு சரியில்லாமல் படுத்திருப்பவரை யமதர்மனுடன் அனுப்பி அவருக்கு ஒரு சமாதி கட்டிவிடும்.

யாரோ மூன்றாம் மனுஷ்யனைப் பற்றியே அக்கறையானால் என்னைப்பற்றி நினைப்பதைச் சொல்லவும் வேண்டுமா? அதுவும் அதிகாலைக் கனவு கண்ட பிறகு?

இந்தச் சங்கடமான சமயத்தில் — கற்பனைக் குதிரை எனக்குக் கனவில் நடந்தது போலவே—குழிதோண்டி புதைத்து, அதன் மேல் சமாதி கட்டி விட்டு வந்து நின்றது. அதன்மேல் நான் அதன் பயனை—நான் இப்போது மரண மடைந்தால் ஏற்படும் பயனை — எண்ணிப் பார்க்க அந்தத் திசையில் குதிரையை ஓட்டினேன்.

ஆகா! அதை நினைக்க, நினைக்க என் மனம் ஒரே குதூகலத்தால் நிரம்பிவிட்டது. அந்தக் குதிரை ஓடிய திசையெல்லாம் ஒரே சந்த வனம்தான். அதாவது புகழ் மாலைகளைச் சுமக்க மாட்டாமல் சுமந்து நின்ற அந்த மனிதர்கள் எல்லோரும் சந்தவனத்து மலர்ச் செடிகளாகவே தோன்றினர்.

ஆமாம், நான் இப்போது இறந்துவிட்டால் மூக்காலமும் உணர்ந்த ஞானி என்று புகழ்ந்து விடுவார்கள். நான் சந்தித்த நண்பர்கள் எல்லோரிடமும் ஒருவிதமாக விடை பெற்றிருக்கிறேனல்லவா? அதைப் பற்றிப் பேசிப் புகழ மாட்டார்களா?

என் இருதயம் மிகவும் அதிகமாக வலித்தது. உட்கார்க்கூட முடியவில்லை. எப்படியோ சமாளித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். என் மரணம் எப்போது வேண்டுமானாலும் ஏற்படலாம். எங்கே வேண்டு

# இன்றைக்கு இருப்பாரை...

புஷ்யன்

ஐயோ! நான் இறந்து விட்டேன். என்னுடைய உயிரற்ற உடல் இதோ கிடத்தப்பட்டிருக்கிறது. பக்கத்தில் என் தாயார், தகப்பனார், அண்ணன், மதனி இன்னும் யார் யாரோ உட்கார்ந்து அழுது கொண்டிருக்கிறார்கள். இவை எல்லாவற்றையும் விட அதிசயம் நானும் பக்கத்தில் நின்று வேடிக்கை பார்ப்பதுதான்.

இதோ, மயானம். என் கையாலே மண் வெட்டியால் எனக்குக் குழி தோண்டிக் கொண்டிருக்கிறேன். எப்படியோ கடைசியில் குழியும் தோண்டியாகி விட்டது.

"ஐயோ! நான் எப்படி இந்தக் குழியில் படுத்துக் கொள்வது? உயிருடன் புதைபட முடியுமா? நான் மாட்டேன்!" என்று துக்கம் நெஞ்சையடைக்கக் கூறுகிறேன். ஆனால் நான் உயிருடன் புதைபட்டாக வேண்டும் என்று மட்டும் என் அந்தராத்மா கூறுகிறது. எல்லோரும் முதலில் அழுது கொண்டிருந்தபோது நான் வேடிக்கை பார்த்தேன். ஆனால் நானே என் கைகளாலேயே எனக்கே குழிவெட்ட ஆரம்பித்ததும் துக்கமும் பயமும் வந்து விட்டது.

என்ன செய்வது? இறந்தாகிவிட்டது. இனி குழியில் போய் இறங்கித்தான் ஆக வேண்டும். இதோ என்னைக் குழியில் இறக்கி விட்டார்கள்.

"ஐயோ, நான் மாட்டேன், நான் மாட்டேன்" என்று கதறிக்கொண்டே எழுந்து விட்டது என் உடல்.

* * *

இது என்ன பிதற்றல் என்று உங்களுக்குத் தோன்றுகிறது அல்லவா?—அதில் ஆச்சரியமில்லைதான்.

ஆமாம்; மேலே மண்ணைத் தள்ளுவதற்குள் நான் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு விட்டேன். எழுந்ததும் சிறிது நேரம் திக்பிரமையுடன் அப்படியே அசையாமல் உட்கார்ந்து விட்டேன். அந்தக் கனவை வீட்டிலும் கூறினேன். அவர்கள், 'நல்ல விடுத்திரக் கனவுடா!' என்று கூறி விட்டார்கள். ஒன்றும் பிரமாதமாக எடுத்துக்கொள்ளவில்லை. வைதீகமும், பழமைக் கொள்கையும் நிரம்பிய என் தாயார் கூடக் கனவு பலிக்கும் என்று இவ்விஷயத்தில் நினைக்க விரும்பவில்லை போலும். ஆனால் நான் அதை என் ஞானதிருஷ்டியாக எடுத்துக் கொண்டேன். அப்படியேன் இருக்க முடியாது?

அன்று "சாயங்காலம் வரும்போது ஞாபகமாய் காப்பிக் கொட்டை வாங்கிக் கொண்டுவா!" என்று அம்மா சொன்னபோது, "பிழைச்சுக் கிடந்தாப் பார்த்துக்கலாம்!" என்று சொல்லி விட்டேன்.

இந்தப் பதில் சாதாரணமாக யாரும் சொல்லக் கூடியதுதான். ஆனால் நான் கொஞ்சம் அழுத்தந் திருத்தமாய்ச் சொன்னேன். என் தாயார் புரிந்து கொள்ளவில்லை.

"அம்மா! பஸ்ட் கிளாஸாய் எலுமிச்சம் பழச் சாதம் பிசைந்து கொடு, மத்தியானம் டிபனுக்கு. உன் கையால் பிசைந்த சாதத்தைக் கடைசியாகச் சாப்பிட்டு விட்டுப் போகிறேன். ஜோராய் இருக்கணும் தெரிந்ததா?" என்றேன்.

"என்னடா, நந்துப் பித்தன்னு உளறுகிறாய்?" என்றாள் அம்மா.

"நான்தான் ஞானக் கண்மூலம் பார்த்தேனே, அம்மா!"

"சரிதாண்டா, வாயை மூடு! அசடு!" என்றாள்.

"அதெப்படியானாலும் போகட்டும். எலுமிச்சம் பழச் சாதம் மட்டும் மறந்து விடாதே. 'ஜில்'லென்று நிறைய நல்லெண்ணெய் ஊற்றி, கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு, பச்சை மிளகாய், முந்திரிப்பருப்பு எல்லாம் போட்டுச் செய்ய வேண்டும், தெரிஞ்சுதா?" என்றேன்.



செய்து முடித்ததும் ஒரு பிடி எடுத்து வாயில் போட்டுக் கொண்டேன். "ஆகா, இதைவிடத் தேவாமிர்தம் என்ன உசத்தி?" என்று தோன்றிற்று.

ஆபத்சகாயம் கோடி வீட்டு ஆள். தினமும் ஆபீஸ் போகும் போது, "மணி என்ன சார்?" என்று கேட்பார். இன்றும் கேட்டார்.

"மணி எட்டரை சார்! மறந்துடாதீங்க! போய் விட்டுவரேன்" என்றேன்.

"என்ன விசேஷம். எங்கே வாவது..." என்று கேட்டார்.

# ஆச்சரியம் இல்லை!



காலையில் தூங்கி எழுந்து




ஸலூனில் ஒரு தூக்கம் போட்டு



பஸ் ஸ்டாண்டிலும் கண்ணயர்ந்து



டிராமிலும் அரைத் தூக்கம் தூங்கி



ஆபீஸிலும் அதையே அனுசரித்து



இரவில் நிஜமாகவே படுக்கப் போனால் "அப்பா! எனக்கு ஒரே ஒரு கதை சொல்லேன்!" என்று பையன் கேட்கும்போது,

"கண்டா! அரை நாழிகை கூட கண்ணயர விட மாட்டாய் போலிருக்கிறதே!" என்று கேட்பதில் என்ன ஆச்சரியம்!

'ஆள யாவுள ?
அலமந்தன மாருதம்
அறைந்த
பூளை ஆயின ;
கண்டனை: இன்றுபோய்ப்,
போர்க்கு
நாளை வா' என
நல்கினன், நாகிளங்
கமு கில்
வாளை தாவுறு
கோசலை நாடுடை
வள் ளல்.

[ஆளயாவுள: நீ எளி யுத்தம் செய்வதற்குப் படை ஏதாவது இருக்கிறதா? இல்லையே; அலமந்தன: உனக்கு ஏற்பட்டுள்ள படைகள் எல்லாம்; மாருதம் அறைந்த பூளை ஆயின: காற்றடித்த மாத்திரத்தில் பூளைச் செடியில் உள்ள நுட்பமான பூக்கள் எல்லாம் புகை போலப் பறந்து போகுமே அதுபோலப் போய் விட்டன (உன் படைகள்); கண்டனை: நீ கண் கூடாகப் பார்த்துக் கொண்டாய் (வேண்டு மானால் திரும்பிப் பார்த்துக் கொள்); இன்று போய்ப் போர்க்கு நாளை வா: இன்று வீட்டுக் குப் போய் விட்டுப் போர் செய்வதற்கான சன் னத்தனும் நாளை இங்கே வா; என நல்கினன்: என்று கருணை காட்டிப் பேசினான்; — யார்? நாகிளங் கமுகில் வாளை தாவுறும் கோசலை நாடுடை வள்ளல்: நீர் நிலையோடு ஒட்டி நிற் கும் வளமான இளஞ் சிறு கமுகின் பூவிலி யில் தேனை உண்ணுவதற்காக வாளை மீன் தாவுகிற, கோசலை நாட்டுக்கு உரியவனான வள்ளல் ராமன்.]



வறண்ட இடத்தில்தான் ஆகா ரம் இன்மை காரணமாக வழிப்பறி கொள்ளை முதலியன நடக்கின்றன என்பது தற்காலத்திய அனுபவம்.

நீர்வளம் நிலவளம் உடையதாய் ஆகார வளம் உள்ள இடத்தில் கொடுமை இருக்கக் காரணம் இல்லை. விருந்தோம்பலும், ஈகையும், தாராள மனப்பான்மையுமே பரவி இருக்கும். அத் தகைய நாட்டில் பிறந்தவர்களுக்குக் கருணை உண்டாவது இயல்புதான்.

வளங்கொண்ட கோசலை நாட்டில் பிறந்து வளர்ந்து, இதயப் பண்பாடு கொண்ட ராமனுக்குக் கருணை பிறந்த தில் வியப்பில்லை என்பதை அழகாய்க் காட்டுகிறார் கம்பர்.

கோசல நாட்டை வர்ணிப்பது வெறும் வர்ணிப்பு அல்ல. கதா நாயக னது இதயப் பண்பைக் குறிப்பிட வந்த பொருள் கொண்ட வர்ணனை.

கருணை பிறந்தது என்னும் விஷயம் 'ஆளயாவுள'என்பதில் தொனிக்கிறது.

கருணை பிறந்தாலும் வீர தத்து வம் அந்தக் கருணைக்குள் கிடக்கிறது. 'நாளை வா' என்று சொல்லி விடாமல், 'போர்க்கு நாளை வா' என்று நயமாய்ச் சொல்லுகிறான் ராமன். "போர்க்கு" என்ற வார்த்தை மோனையோடு அழுத் தம் கொடுத்து நிற்கிறது.

கடைசியாகக், கமுகும், வாளை மீனும், கோசல நாடும் சேர்ந்து கருணைக்கு ஒரு அழகிய தன்மையைக் கொடுக்கிறது. இந்தத் தன்மையோடு முடிகிறது முதல் நாள் போர்.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 284. நாளை வா போர்க்கு

ராவணனைப் பார்த்து ராமன் சொல்லுகிறான் :

"முதல் முதலாகச் செய்யவேண்டிய காரியத்தை—சாமான்யமான காரியம் தான் அது—சொல்லுகிறேன் :

"சிறையில் வைத்திருக்கிறாயே சீதையை, அவளை விட்டுவிட வேண்டியதுதான். அதுவோ இருக்கிறது, இருக்கட்டும். அடுத்தாற் போலச் செய்ய வேண்டிய காரியத்தைக் கேள்.

உயர்ந்த பண்பாடுடைய முனிவர்கள் பக்தர்கள் எல்லாரையும் பூஜிக்கத் தகுந்த கௌரவ நிலையில் வைக்க வேண்டும்.




சிறையில் வைத்தவள்
தன்னைவிட்(டு), உம்பரைத்
தே வர்
முறையில் வைத்து,நின்
தம்பியை இராக்கதர்
முதற் காம்
இறையில் வைத்(து)அவற்(கு)
ஏவல்செய் திருத்தியேல்,—
இன் னும்
தரையில் வைக்கிலேன்
நின்தலை வாளியின்
தடிந் து.

[உம்பரை: பக்தர்களை; தேவர் முறையில் வைத்து: பூஜிக்கத் தகுந்த தெய்வங்களாகக் கௌரவித்து; நின் தம்பியை: உன் தம்பி விபீஷணனை; இராக்கதர் முதற்காம் இறையில் வைத்து: அரக்க குலத்துத் தலைமைக் கரண அரச பதவியில் வைத்து; அவற்கு ஏவல் செய்து இருத்தியேல்: அந்த விபீஷணன் கட்டளைப்படி ஏவல் செய்து இருப்பாயானால்; இன்னும்: நிர்கதியான இந்த நிலையிலும் கூட; தரையில் வைக்கிலேன் நின் தலை: தரையில் உன்னுடைய தலையை வைக்கமாட்டேன்; அதாவது வாளியின் தடிந்து: அம்பினால் உன் தலையை அறுத்து;]

குறிப்பு:—ஆங்கார பாவம் வெகு அழகாய்ச் செய்யுளில் தொனிக்கிறது.

இன் னும்
தரையில் வைக்கிலேன்
நின்தலை வாளியின்
தடிந் து

என்ற சொல்லின் வேகம் வெளிப்படை.

* * *

இந்த விதமாக ஆங்காரமாய்த் தான் ராமனுக்கு வார்த்தை வந்தது. ஆனாலும் அடுத்த நிமிஷம் மனசை விட்டு ஆங்காரமும் நீங்குகிறது; இரக்கமே வந்து விடுகிறது:

சொல்லுகிறான் ராமன்.

"உனக்கு அரக்க வீரர்கள் படை படையாய் இருந்தார்கள். குதிரைப் படை, யானைப் படை, தேர்ப்படை எல்லாம் இருந்தன. அவைகள் போன இடம் தெரியாமல் ஓடிப் போய் விட்டன. உன் உபயோகத்துக்கு ஒன்றும் இல்லை தானே.

# வரட்சியும், புழுதியும் கொண்ட காலம்



நோயை உண்டாக்குகிறது

தொண்டைப்புண் ஜாக்கிரதையாயிருங்கள்

வரட்சியான சீதோஷ்ண நிலைமையுள்ள காலத்தில் காற்றில் கிருமிகள் கலந்திருக்கின்றன. அதனால் வாயவரட்சியும் தொண்டைப் புண்ணும் உண்டாகிறது. பின்னிட்டு வரும் கடுமையான நோய்களுக்கு இவை அறிகுறியாகும். எனவே உடனடியாக இவற்றைக் குணப்படுத்திக் கொள்ளவேண்டும். இதற்கு 'ஆஸ்ப்ரோ' விரைவில் நிவாரணமளிக்கும் வாய் கொப்புளிக்க உபயோகித்தால் தொண்டைக்கு இதமாயிருக்கும்; வரட்சி நீங்கும்; நிச்சயமாய் குணமேற்படும்; வியாதி தொற்றிக் கொள்ளும் தன்மையும் தவிர்க்கப்படும். இன்றே ஒரு பாக்கெட் வாங்குங்கள்—1½ அணாதான் அல்லது 15 அணா—அவசரத்திற்கு உதவ 'ஆஸ்ப்ரோ' உங்களிடம் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளுங்கள்.

## துரித நிவாரணி

'ஆஸ்ப்ரோ'

உங்களையும் உங்கள் குடும்பத்தையும் கீழ்க்கண்ட நோய்களிலிருந்து காப்பாற்றும்.

நரம்புவலி, ஜலதோஷம், இன்புளூயென்ஸா, தொண்டைப்புண், முதுகுவலி, தலைவலி, கீல்வாதம், மூட்டுவலி, பிடிப்பு, தூக்கமின்மை.

## 'ஆஸ்ப்ரோ'வைக் கொண்டு கொப்புளிக்கவும்



விலைகள்: அணா 1½ (3 வில்லைகள்) அணா 15 (30 வில்லைகள்)

# காலக்ஷேபம்

### உபயோகமில்லை!

ஒரு ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒருவர் வெகு கோபமாகப்பேசினார்.

"ஓய், இது என்ன இட்டிலியா, மண்ணுக்கட்டியா?"

"உங்களுக்கு ருசியினால் கண்டுபிடிக்க முடியவில்லையா?"

"இல்லை, அதுதானே கேட்கிறேன்?"

"அப்படியானால் நான் சொல்லுவதில் உங்களுக்கு என்ன உபயோகம்?"

★

### சிந்தனைக்கு விருந்து!

வந்தவர்:—என் ஸார்! இது என்ன அநியாயம்! வெறும் வெள்ளைக் காகிதத்துக்கு நூறு ரூபாய் விலை கேட்கிறீரே!

சித்திரக்காரர்:—உமக்குத் தெரிந்தது அவ்வளவுதான்! உயர்ந்த சித்திரம் என்றால் வர்ணம் தீட்டிவிட்டால் போதுமா? படம் பார்ப்பவர்களின் சிந்தனைக்கு விருந்தாக இருக்க வேண்டும். அவர்களே ஊகித்துக் கொள்ளுவார்கள் என்றுதான் ஒன்றும் எழுதாமல் விட்டிருக்கிறேன்!

★

### காரணம்

தகப்பனார்:—என்டா, சோமு! கேள்வியை மட்டும் மனப்பாடம் செய்கிறாயே, அதற்கு என்ன பதில் என்று உனக்குத் தெரிய வேண்டாமா?



சோமு:—பதில் என்னவென்று தெரியும், அப்பா! எந்தக் கேள்விக்கு அந்தப் பதில் என்று தெரிய வேண்டுமே! அதற்குத்தான் கேள்வியை மனப்பாடம் செய்கிறேன்!

### யுக்தி!

ஒருவன் புதிதாகக் கடை திறந்தான். அன்று ஒவ்வொரு குழந்தைக்கும் ஒரு பலூன் இனாமாக வழங்கினான். ஒரு சின்னப் பையன் தனக்கு இரண்டு பலூன் வேண்டுமென்று கேட்டான்.

கடைக்காரர்:—ஒரு பையனுக்கு ஒரு பலூன்தான் கொடுப்பேன். உனக்கு மாத்திரம் எப்படி இன்னொன்று கொடுக்க முடியும்? வீட்டில் உனக்குத் தம்பி இருக்கிறானா?

பையன்:—இல்லை! (சற்று யோசனை செய்து விட்டு உற்சாகமாக) என் அக்காளுக்கு ஒரு தம்பி இருக்கிறான். அவனுக்கு ஒரு பலூன் கொடுங்கள்!

★

### திருஷ்டி பரிகாரம்!

நண்பன்:—வீடு ரொம்ப நன்றாயிருக்கிறது. திருஷ்டி பரிகாரம் ஏதாவது செய்ய வேண்டும்.

வீட்டுக்காரர்:—அவசரமில்லை; மெதுவாகச் செய்து கொண்டால் போகிறது? நான் எப்பொழுதும் வீட்டில்தான் இருப்பேன்!

★

### அவர் சொன்னது!

முதல் சோல்ஜர்:—போன மகாயுத்தத்தில் நான் ஒரு காட்டில் முகாம் போட நேர்ந்தது. அப்பொழுது ஒரு புலி என்னை நெருங்கிவந்தது. தைரியமாகச் சுட்டேன். உடனே இன்னொரு புலி வந்தது. அதையும் சுட்டு வீழ்த்தினேன்!

இன்னொரு சோல்ஜர்!—சும்மா அளக்காதீர்களே! நானும் அந்த யுத்தத்தில் சேர்ந்திருந்தவன்தானே? அந்தக் காட்டிலே புலியே கிடையாதே!

முதல் சோல்ஜர்:—நான்தான் எல்லாவற்றையும் சுட்டு வீழ்த்திவிட்டேன் என்று சொன்னேனே!

★

### அற்பத்தனம்

ஊரிலிருந்து வந்தவர்:-சர்மா உங்களை ரொம்பக் கேட்டதாகச் சொல்லச் சொன்னார்.

இவர் (முகத்தைச் சுளித்துக் கொண்டு):-சுத்த அற்பன். அவன் எப்போதோ ஒரு பத்து ரூபாய் கொடுத்தான், அதைச் சும்மா கேட்டுக் கொண்டிருக்கிறான்.

நக்குள் போனாலும் சரி. இரண்டும் ஒன்று தான்" என்று எண்ணியவனாய் வைத்தியரின் வீட்டை நோக்கி நடந்தான்.

அவன் போன சமயம் வைத்தியர் வீட்டிலில்லை. இருட்டி வெகு நேரம் வரையில் அவரை எதிர்பார்த்துக் காத்துக் கிடந்தான். அவர் திரும்புகிற வழியாயில்லை. வைத்தியர் வந்தால், காலையில் தன் வீட்டுக்கு அவரை அனுப்பி வைக்கும்படியாக அவர் வீட்டில் சொல்லிவிட்டுத் தன் ஊருக்குத் திரும்பினான்.

வளர்மதியின் பவனி முடிந்து வெகு நேரமாகி விட்டதால் வழி நெடுகிலும் ஒரே கும்மிருட்டாயிருந்தது. சாலையிலே அவனைத் தவிர, மனித நடமாட்டமே யில்லை. அந்த பயங்கரச் சூழ்நிலை அவன் மனத்தில் என்னென்னவோ விபரீதக் கற்பனைகளைத் தட்டி யெழுப்பியது. தையநாயகி இறந்து கொண்டே யிருப்பதுபோல் ஒரு பிரமை!

பக்கிரி தன் வீட்டு வாசலை யடையும் போது, காலையில் அவன் கண்ட பிச்சைக் காரனின் உருவம் ஒரு கணம் அவன் மனத்திரையில் தோன்றி மறைந்தது. ஏழுமலையான் கைவிடமாட்டான் என்ற நம்பிக்கையும் அவன் உள்ளத்தின் ஆழத்திலே வேரூன்றியது.

* * *

பக்கிரி உள்ளே நுழைந்ததும் முதலில் அவன் கேட்ட கேள்வி, "தையநாயகி உயிரோடிருக்கிறாளா?" என்பதுதான். அதற்குக் கிழவன், "இந்தப் பூட்டுக்கு அவ பொழைச்சட்டா! வேளாங்குடி வைத்தியரு நேரே இங்கேயே வந்துட்டாரு, மருந் தோடே, அந்த மருந்து—அது என்ன சாதாரண மருந்தா?—அமிருதந்தான் தம்பி, அது! ஒரே உருண்டைதான் கொடுத்தாரு, வைத்தியரு. அவரு அந்தண்டை போயிருப்பாரு; இந்தப் பக்கம் தையநாயகி கண் திறந்து பார்த்துப் பேசவே பேசிட்டா!" என்றான் உவகையுடன்.

"எல்லாம் ஏழுமலையான் கருணைதான்" என்றான் பக்கிரி. அவன் கரங்கள் வான வெளியை நோக்கித் தாமாகவே குவிந்தன.

கிழவன் எதையோ நினைத்துக் கொண்டவனாய்த் திடீரென்று பக்கிரியைப் பார்த்து, "ஆமாம், நீ ஏழுமலையான்னு சொன்னதும் ஞாபகம் வருது. மஞ்சள் துணியிலே ஏழுமலையானுக்குக் காணிக்கை செலுத்துகிறதாக ஒரு காலணா முடிஞ்சு போட்டிருந்தே யில்லே? அதைக் காணவேயில்லையே, தம்பி?" என்று கேட்டான்.

தையநாயகி அப்போது கண் விழித்துக் கொண்டாள். அருகில் பக்கிரியைப் பார்த்ததும் அவள் முகத்தில் சந்தோஷத்தின் சாயல் லேசாகப் படர்ந்தது. "இப்போ தான்...வந்தீங்களா?" என்றாள், மெது வான குரலில்.

பக்கிரிக்குப் போன உயிர் திரும்பிவந்தது போலிருந்தது, அவள் குரலைக் கேட்டதும். "ஆமாம், தூங்கு; அதிகமாகப் பேசாதே!" என்று சொல்லிவிட்டுக் கிழவன் பக்கம் திரும்பி, "காணிக்கை சேர வேண்டிய இடத்துக்குத்தான் போயிருக்கு" என்றான்.

வேளாங்குடி வீதியிலே பிச்சைக்காரனுக்கு அவன் கொடுத்த காலணா, ஏழுமலையானுக்குச் செலுத்துவதற்கென இருந்த அதே காலணாத்தான்!

"அப்போ நீ வழியிலேயே மேட்டுத்தெரு பழனிச்சாமியைப் பார்த்துட்டியா?" என்று கிழவன் ஆவலோடு கேட்டது, பக்கிரியின் காதில் ஏறவேயில்லை.

உடலை அசைத்தான். உடல் என்னவோ அசைந்ததே யொழிய உதடு அசையவே யில்லை! மேலும் அவன் பதில் பேசினாலும் கூட, அது எங்கிருக்கிறதென்று அவனுக்கு எப்படித் தெரியும்? அவனா முடிபோட்டு வைத்தான், காணிக்கைப் பணத்தை? ஏதோ கிழவனுக்கு ஒரு நப்பாசை, எப்படியாவது அது அகப்பட்டு விடாதா என்று!

கிழவன் அலுத்துப்போய்ப் பழனிச்சாமியைப் பார்த்து "தம்பி, எங்கே தேடியும் அதைக் காணல்லே. பக்கிரி வேளாங்குடியிலேருந்து வந்ததும் தேடிப் பார்க்கச் சொல்லி, விடியுமுன்னே கொடுத்தனுப்பறேன். நல்ல இருட்டு; ஜாக்கிரதையாக வழியைப் பார்த்து வீட்டுக்குப் போ, அப்பா" என்று சொல்லி அவனை வழியனுப்பி விட்டுப் படுக்கையில் வந்து சாய்ந்தான்.

உடனே யாரோ மீண்டும் கதவைத் தட்டவே, கிழவன் போய்த் தாழ்ப்பாளை நீக்கினான். பக்கிரியைத்தான் அவன் எதிர்பார்த்தான். ஆனால் உள்ளே நுழைந்தது, வேளாங்குடி வைத்தியர்தான். கிழவனுக்கு அது ஆச்சரியமாயிருந்தது.

"என்னங்க வைத்தியரையா, பக்கிரி உங்களைத் தேடிக்கிட்டு வேளாங்குடிக்கு வந்திருக்குமே? நீங்க காணல்லியா?" என்றான்.

அதற்கு வைத்தியர், "நான்தான் விடிஞ்சதுமே எழுந்து முள்ளிமலைக்குப் போயிட்டேனே, பச்சிலை பறிக்க! அதுகூட உங்க காரியமாத்தான். சேத்து ஒட்டடை அடிக்கிறப்போ எங்க பாட்டனார் வச்சிட்டுப் போன சுவடி ஒண்ணு மச்சிலேருந்து விழுந்தது. அதிலே இந்த வியாதிக்கு—உங்க மகனை ஆட்டிவைக்கிறதே, அந்த வியாதிக்கு—மருந்து கண்டிருந்தது. அதுக்குத் தேவையான ஒரு பச்சிலைக்காகத்தான் முள்ளி மலைக்குப் போயிருந்தேன். வெய்யலுக்கு முன்னே பறிக்கவேண்டிய பச்சிலை அது; வெய்யல் கண்ட பின்னே வாடிப் போயிடும். அடையாளம் காணவே முடியாது. அதிருக்கட்டும்; மருந்து இதோ இருக்கு. உங்க மகனை எழுப்புங்க. முதல்லே மருந்தைக் கொடுத்துடலாம்" என்றார்.

கிழவன் மகனை எழுப்பிவிட்டு, வைத்தியர் கேட்டபடி சுடுதண்ணீர் காயவைப்பதற்காக உள்ளே போய் விட்டான். இறுக மூடியிருந்த அவன் உதடுகளை நீக்கி ஒரு கழுக்கோடி யளவு லேகியத்தை உருட்டி வாய்க்குள் போட்டார் வைத்தியர். கிழவன் கொண்டு வந்த வெந்நீரையும், கொஞ்சம் அவன் வாய்க்குள் ஊற்றியதும் சடையாண்டி கண் திறந்து பார்த்தான். ஆம்; மருந்து வேலை செய்யத் தொடங்கி விட்டது.

• • •

அன்று, அந்தக் கடும் வெய்யிலையும் மூன்று கல் தூரத்தையும் லட்சியம் செய்யாது விடு, விடென்று நடந்து வேளாங்குடியை அணுகும்போது, பக்கிரி ஒரு கோரமான காட்சியைக் காண நேர்ந்தது. சுமார் ஐம்பது வயதுக்கு மேற்பட்ட ஒரு பிச்சைக்காரன் கையில் ஒரு பித்தளைச் செம்பைப் பிடித்துக் கொண்டு, "ஏழுமலையானே, கோவிந்தா!" என்று கூவிய வண்ணம் அந்தப் படை பறக்கும் வெய்யிலிலே தெருவில் புரண்டு, புரண்டு அங்கப்பிரதட்சிணம் செய்து கொண்டிருந்தான். உடலெல்லாம் பெருகி வழியும் வியர்வையில் வறுத்து எடுத்ததுபோன்ற மணலும் தெருப்புழுதியும் ஒட்டிக் கொண்டிருந்தது. நெற்றியிலும், செம்பிலும் பட்டை, பட்டையாக நாமம். அவன் ஒவ்வொரு தடவை புரளும்போதும் அவனுடைய தடி வயிற்றுச் சதை முதுகெலும்பைத் தொட்டதுபோலிருந்த அந்தக் காட்சி பக்கிரியை நிலைகுலைய வைத்தது. பாவம், காலி வயிறு!

உழைத்து உரமேறியிருந்த பக்கிரியின் உள்ளங் கால்கள் கூடத் தாங்கமுடியாத அந்த அந்தச் சூட்டை, அந்த ஏழைப் பரதேசியின் உடல் எவ்விதம்தான் தாங்கிற்றோ என்று வியப்பும் பச்சாதாபமும் கலந்த உணர்ச்சியோடு அவனைத் தாண்டி அப்பாற் போக முயன்றான், பக்கிரி. அப்போது அந்தப் பரதேசி, "ஐயா! ஏழுமலையான் சன்னதிக்குப் போவதாகப் பிரார்த்தனை. அதுவரைக்கும் இந்த உயிரைக் காப்பாற்ற, உங்களால் முடிந்த தருமத்தைச் செய்ய முடியுமா?" என்று பக்கிரியைப் பார்த்துக் கெஞ்சிக் கேட்டான். அதற்கு மேலும் பக்கிரியால் சும்மா இருக்க முடியவில்லை. அவன் அதற்கு முன்பும் எத்தனையோ ஏழைகளைக் கண்டிருக்கிறான். பட்டினியின் கோரத்தைக் கடந்த சில வருஷங்களில் அவனே அநுபவித்தும் இருக்கிறான், ஓரளவுக்கு. இருந்தாலும், அங்கப் பிரதட்சிணம் செய்து கொண்டிருந்த அந்தப் பிச்சைக்காரனைக் கண்டதும் அவன் உள்ளம் ஏனோ நெகிழ்ந்து விட்டது. தன் மடியில் ஜாக்கிரதையாக முடிபோட்டு வைத்திருந்த அந்த காசுகளை எடுத்து, அவன் கையிலிருந்த செம்புக்குள் போட்டுவிட்டு, "இந்தப் பணம் திருப்பதிக்குப் போய்ச் சேர்ந்தாலும் சரி; அல்லது அவன் வயிற்

ஐப்பசி மாதத்து வானம், அருக்கோடை போல் வெளுப்பு மாறாமலிருந்து விட்டதால் பயிர், பச்சைகள் கருகிவிட்டன. உடம்பு சரியில்லை என்று ஒருநாள் தகப்பன் வீட்டுக்குச் சென்ற தையநாயகி அங்கேயே படுத்த படுக்கையாகி விட்டாள். பக்கத்து ஊரிலிருந்த லோகல் பண்டு ஆஸ்பத்திரியைச் சேர்ந்த இங்கிலீஷ் வைத்தியரிடம் காண்பித்ததில் அது செல்வச் சீமான்களுக்கு வந்திருக்கவேண்டிய வியாதியென்றும் இருபது ஊசிகளுக்குக் குறையாமல் போடவேண்டுமென்றும் தெரியவந்தது. அவள் படுத்த படுக்கையாகி எறக்குறைய ஒரு வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டது. ஏழ்மையின் கொடுமையும் சேர்ந்துகொள்ளவே அவள் வியாதி நாளுக்கு நாள் மோசமாகிக் கடைசியாக இன்றோ, நாளையோ என்ற நிலைமைக்கு வந்துவிட்டது.

* * *

கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது. கிழவன் உள்ளிருந்தபடியே, "யாரது?" என்றான். பக்கிரிதான் வேளாங்குடியிலிருந்து மருந்து வாங்கிக்கொண்டு வந்திருப்பான் என்று நினைத்தவனாய்க் காலை இழுத்து, இழுத்து நடந்துவந்து கதவைத் திறந்தான். மேட்டுத்தெரு பழனிச்சாமி மேல்மூச்சு, கீழ்மூச்சு வாங்க நின்றுகொண்டிருந்தான். "என்னடா தம்பி? என்ன விசயம். இப்படி அவசரமா ஓடியாந்தே?" என்று கிழவன் கேட்டதற்கு, "ஒண்ணுமில்லே, கவலைப்படாதிங்க? எங்க பக்கத்து வூட்டுக்கு விருந்தாளி வந்திருக்காங்களே, அவுங்க விடிஞ்சு எழுந்ததும் திருப்பதிக்குப் போறாங்களாம். உங்க மகளை உத்தேசம் பண்ணி ஏழுமலையானுக்கு ஏதோ காணிக்கை செலுத்தணும்னு முடிஞ்சு போட்டிருக்கிறதாகச் சொன்னீங்களே; அதை வேணுமானால் வாங்கிகிட்டுப் போயி அவுங்க மூலமா ஏழுமலையான் உண்டியிலே போடச் சொல்லிடலாமேன்னு வந்தேன்" என்றான், பழனிச்சாமி.

"ரொம்ப நல்லதாப் போச்சு! கொஞ்சம் பொறு, அதை எடுத்துத் தரேன். தெய்வக் குத்தமாத்தான் இருக்கணும். இல்லாது போனா, எப்படியிருந்த பொண்ணு—இப்படிக் கயிறு போலே ஆயிடுத்தே?" என்று சொல்லிவிட்டுக் கிழவன் உள்ளே சென்று அதைத் தேடத் தொடங்கினான். ஆனால் அது அகப்பட்டால்தானே? சட்டி, பானை, மாடம், மூலை, முடுக்கு எல்லா இடமும் பார்த்தாகி விட்டது; ஊஹூம். கிடைக்கிற வழியா யில்லை. சரியான சமயத்துக்குக் கிடைக்கவில்லையே யென்று கிழவனுக்குக் கோபம் மூண்டெழுந்தது. ஆனால், யாரிடம் காண்பிப்பது கோபத்தை?

கடைசியாகத் தன் மகளையே கேட்டுப் பார்த்து விடுவது என்று தீர்மானித்து, அவளருகில் சென்று உரத்த குரலில் "தையநாயகி!" என்றழைத்தான். பதிலில்லை. மீண்டும் பல தடவைகள் கூப்பிட்டான். அவள் வாய் திறக்கவில்லை.



# காணிக்கை

**ரா. பாலகிருஷ்ணன்**

தையலநாயகி யமனுடன் போராடிக் கொண்டிருந்தாள். அந்தக் கும்பிருட்டிலும் அவள் கண்கள் எதையோ, யாரையோ தேடி அலைந்த வண்ணம் இருந்தன. தலைமுறை, தலைமுறையாக அந்தக் குடும்பத்தினர் ஆண்டு அநுபவித்த ஒரு பழைய கோரைப் பாய் அவளது நடுங்கும் உடலை அணைத்துப் போர்த்தியிருந்தது.

அந்தச் சிறு குச்சிலில் நிலவிய மௌனத்தைக் கலைத்தது சுவர்க்கோழியின் சப்தம் ஒன்றுதான். இடையிடையே எப்போதாவது ஒரு தடவை ஆந்தையொன்று பயங்கரமாக அலறும். அந்த அருவருப்பு நிறைந்த ஒலியைக் கேட்டதும் தையலநாயகி மிரண்டு சுற்று முற்றும் கண்களை ஓட்டுவாள். உலர்ந்து ரசமற்றுப் போன வெற்றிலைச் சருகையும் துண்டுப் புகையிலையையும் வாயில் குதப்பியபடியே கவலை தோய்ந்த முகத்துடன் வலது முழங்காலைக் கட்டிக் கொண்டு அருகில் உட்கார்ந்திருந்தான், அவள் தகப்பன் காத்த பெருமாள் படையாட்சி. அவனால் வேறு என்னதான் செய்துவிட முடியும்? போகும் உயிரைத் தடுத்து நிறுத்த, ஒரு நாட்டு வைத்தியன்கூட அல்லவே அவன்!

ஏறக்குறைய அவளுடைய துர்ப்பாக்கிய நிலைமையிலேயே இருந்த ஒரு கிழநாய் கடைசித் தடவையாக ஊளையிட்டது. குழி விழுந்திருந்த அவளுடைய கண்கள் ஒரு தடவை சுழன்று, அதல பாதாளத்தில் போய்ப் புதைந்து கொண்டன.

“அப்பா! விளக்கைக் கொஞ்சம் பெரிசு பண்றியா?” என்று அவள் ஈன சுரத்தில் கேட்டதுகூட, அந்த ஊளைச்சத்தம் அவள் மனத்தில் தோற்றுவித்த பீதியின் விளைவுதான் என்பதைப் புரிந்து கொண்டான் கிழவன். ஆனால், எவ்வளவு தூண்டினாலும் அந்த விளக்கின் பிரகாசம் என்னவோ அதிகமாகிவிடப் போகிறதில்லை என்பது கிழவனுக்கு நன்றாகத் தெரியும். ‘விளக்கிலே எண்ணெயில்லேம்மா; திரிதான் எரிஞ்சுண்டிருக்கு’ என்று சொல்ல வந்தவன் அதைச் சொல்லாமலே மூலையில் கிடந்த சில பழைய காகிதங்களைக் கொளுத்திப் போட்டு இருளை விரட்டியடிக்க முயன்றான். அவ்வொளியினால் சற்றே தெளிவுற்ற தையலநாயகியின் முகம் மீண்டும் தன் புருஷனை எதிர்பார்ப்பதுபோல் தோன்றியது.

இருக்காதா பின்னே? தனக்கு மருந்து வாங்குவதற்காக வேளாங்குடி வைத்தியரைத் தேடிப் புறப்பட்டுப்போன புருஷன் நள்ளிரவுக்குப் பின்னும் திரும்பவில்லையே என்ற ஏக்கத்தால் அவள் உள்ளம் வெதும்பிக் கொண்டிருந்தது. அதுமட்டுமா? அவன் வருவதற்குள்ளேயே — அந்த லேசான மூச்சும் நின்றுவிட்டால்? மிருத்யுவையே நேரில் கண்டாலும் கூட, ‘என்னைக் கொண்டுபோய் விடுவதைப் பற்றி ஆட்சேபணையில்லை; ஆனால் என் புருஷன் திரும்பி வருமட்டும் பொறுத்திருக்க வேண்டும்’ என்று கண்டிப்பாகக் கூறிவிடும் நிலையில் இருந்தாள், அவள்.

• • •

நாட்டாண்மைக்காரக் காத்த பெருமாள் படையாட்சியின் ஒரே வாரிசு தையலநாயகி. அவளுடைய தாய் இறந்ததும் அந்த ஸ்தானத்தையும் தானே ஏற்றுக்கொண்டு அவளை வெகு அருமையாக வளர்த்தான், காத்த பெருமாள். தன் வயதுக்காலத்தில் அருமை மகள் எப்போதும் தன் கண்ணெதிரிலேயே இருக்க வேண்டுமென்ற ஆசையினால் உள்ளூரிலிருந்த பக்கிரிசாமிக்கே அவளைக் கட்டிக் கொடுத்தான். பக்கிரி பெரிய பணக்காரனல்ல. கொஞ்சம் புன்செய்யும் ஒரு ஓட்டு வீடும்தான் அவனுடைய ஆஸ்தி. இரண்டு, மூன்று ஜீவன்கள் கௌரவமாக வாழ்வதற்குப் போதாதா, அந்தச் சொத்து? அலுக்காமல் சலிக்காமல் நிலத்தில் பாடுபட்ட பக்கிரிசாமி அந்தச் சொற்ப வருமானத்தைக் கொண்டு தன் கிழத் தாயாரையும் அழகிய பெண்சாதியையும் ஊரார் மெச்சும்படி வைத்துப் பராமரித்தான். காத்த பெருமாளும், பெண்ணைப் பற்றிய கவலை யேதுமின்றி நிம்மதியாக இருந்து வந்தான்.

ஆனால், நல்ல மனிதர்கள் நல்லபடியாகவே வெகுநாள் வாழ்வதில் கடவுளுக்கே விருப்பமிருக்கிறதில்லை. நாம் கண்கூடாகக் காணும் இந்த உலக நியதிப்படியே, காலச் சக்கரம் ஒன்றிரண்டு வருஷங்களைச் சுழற்றியதும், பக்கிரியின் குடும்பம்—கிழவன் காத்த பெருமாள் உட்பட—அநேக சங்கடங்களுக்கு உள்ளாக நேரிட்டது.

ஏற்கெனவே பாரிசவாயுவால் பீடிக்கப்பட்டிருந்த காத்த பெருமாள் தள்ளாமையை முன்னிட்டு அந்தப் பதவியை விட நேர்ந்தது. அடைமழை பெய்யவேண்டிய

கார தோணியிலேயே "ஏய் சோமு! இங்கே வா!" என்று அழைத்தான்.

சோமு அவன் எதிரில் வந்து நின்றான். "உனக்கு ரஞ்சிதத்தின் பேரில் ஆசை தானே?"

சோமு "ஆமாம்" என்றான் மெது வான குரலில்.

"சரி! அப்படின்னா நீ அவளைக் கல்யா ணம் செய்துக்கப் போறே, இல்லையா?" என்றான்.

"ஆமாம்."

"அப்படின்னா நீ அவளைக் கல்யாணம் செய்துக்கிட்டு புருஷனும் பெண்ஜாதி யுமா ஊருராகச் சுற்றி நாடகமாடிச் சம்பாதிக்கலாம்ன்னு உத்தேசம்!"

"அப்படியெல்லாம் யோசனை இல்லே. எங்க ஊரிலே எனக்குக் கொஞ்சம் நில புலன் இருக்குது. அதை உழுது பயிரிட்டுக் குடும்பம் நடத்தலாம்ன்னு இருக்கேன். ஏதோ ஆசையாலேதான் நான் நாடகத் திலே சேர்ந்தேன். அந்த ஆசை ஒழிஞ்சு போச்சு......" என்றான் சோமு.

சின்னக் கண்ணுவின் முகத்தில் சிறிது தெளிவு ஏற்பட்டது. இருந்தாலும் அவன் முகத்தில் சூழ்ந்திருந்த சோகக்களை மறையவில்லை. "அதுதான் சரி! எனக்கு ஏன் தெரியுமா இந்த ராஜபார்ட் போட் டுக்கிறவங்களைக் கண்டாப் பிடிக்கல்லே? இப்படி நல்ல பெண்களையெல்லாம் ஆசை காட்டி அழைத்துக்கிட்டுப் போய்க் கெடுத்துச் சந்தியிலே நிறுத்திப்பிடுறாங்க. அதனாலேதான். நீ இப்போதே இவளை அழைச்சுக்கிட்டு ஊரை நோக்கிக்கிளம்பு. நீங்க எங்கேயாவது சௌக்கியமாய் இருந் தால் சரிதான். ஆனால் இதோடே நாடக ஆசையை மறந்துடுங்க. மறுபடியும் நாடகமாட லாம்ன்னு கன வுகூட காணா தீங்க. ஊம், உன் துணிமணி களை எல்லாம் எடுத்துக் கிட்டு இப்பவே கிளம் பிடு, ரஞ்சிதம்! உன்னையும் தான்! நீயும் கிளம்பு" என் றான்.

ரஞ்சிதம் கண்கள் கலங்கி நீர் பெருக "நீங்க...?" என் றாள் தழுதழுத்த குரலில்.

"நானு...!" என்று சொல்லி ஏளன மாகச் சிரித்து விட்டு "முருகன் இருக் கான்......இத்தனை நாளா என்னை யாரா வது பாதுகாத்துக் கிட்டு இருந்தாங் களா?" என்றான்.

ரஞ்சிதம் ஒன்றும் பதில் பேசவில்லை. கண்களைத் துடைத்துக் கொண்டே புடவை துணிமணிகளை எடுத்து வைத்து விட்டு அவனை நமஸ்காரம் செய்தாள்.

"போய் வா! இரண்டு பேரும் அன் யோன்னியமா இருங்க" என்றான் சோகம் தோய்ந்த குரலில் கலங்கிய கண்களுடன். பந்தம் விலகினாலும் வளர்ந்த பாசம் விலகவில்லையே?

சோமுவின் பின்னால் கையில் ஒரு துணி மூட்டையுடன் ரஞ்சிதம் நடந் தாள். நெடுநேரம் வரையில் அவர்கள் சென்ற திசையையே பார்த்துக் கொண் டிருந்துவிட்டு உலக பந்தம் எல்லாவற்றி லிருந்தும் விடுதலையடைந்து விட்டவன் போல் ஒரு பெருமூச்சு விட்டான் சின்னக்கண்ணு.

ஆர்மோனியம் வடிவேலு அவனுக்குப் பக்கத்திலே வந்து நின்று "எல்லாத்தை யும் தீர்த்துக் கட்டிட்டீங்க—மேலே என்ன செய்யலாம்னு உத்தேசம், வாத் தியாரய்யா?" என்றான்.

சின்னக் கண்ணு அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே "எனக்கும் வயசா யிடுச்சு—உனக்கும் வயசாயிடுச்சு—இனி மேல் இந்த நாடகப் பிழைப்பு நமக்குச் சரிப்பட்டு வராது.—நீ கொஞ்சம் ஆர் மோனியம் வாசிப்பே—நான் கொஞ்சம் பாடுவேன். நம்ம சுப்பய்யா ஏதோ கொஞ்சம் மத்தளம் தட்டுவான். நாம் இப்படியே பஜனை செய்துக்கிட்டு ஒவ் வொரு க்ஷேத் திரமாகத் தரி சனம் செய்துக் கிட்டு வருவோ மே!" என்றான்.

"அதுதான் சரி! அந்த யோசனைதான் எனக்கும் பட் டது" என்றான் வடிவேலு.

"ஆமாம் ஆமாம் — அது தான் சரி" என்று மத்த ளக்காரச் சுப் பையாவும் ஒத் துத் தாளம் போட்டான்.



கடத்திக் கிட்டுப் போயி வீட்டிலே வைத்துக்கிட்டு 'அத்தை பெண்ணு, மாமன் மகள்'ன்னு ஏதேனும் சொன்னால் சரியாப் போயிடுமா? இதென்ன விளையாட்டுக் கதையா?" என்றான்.

"என்ன செய்யறது? விளையாட்டுக் கதை போலத்தானிருக்குது. அந்தக் கதையைத்தான் கொஞ்சம் கேளு. அந்தப் பெண்ணு குஞ்சிதம் இருக்காளே அவள் இந்த ஊருப் பெண்தான்—நல்ல பணக்கார வீட்டுப் பெண்ணு. மாமாங்கத்துக்குக் கும்பகோணம் போனவங்க கூட்டத்திலே அவளை தவற விட்டுட்டாங்க—அப்போ அவளுக்கு வயசு ஐந்து. நீ இங்கே நாடகம் ஆரம்பிக்கும் போதே ஊரிலே சில பேருக்குச் சந்தேகம்—குஞ்சிதம் அவள் தாயாரைப் போலவே இருந்ததால் கந்தசாமி நிச்சயமாக அவள் தன் அத்தை மகள்தான்னு அபிப்பிராயப் பட்டுட்டான்—உன்னிடம் நேரிலே கேட்டா ஏதாகிலும் கலாட்டா ஆயிடப் போகுதேன்னு குஞ்சிதத்துக் கிட்டேயே மெதுவாப் பேசி உண்மையைச் சொல்லி முன் ஏற்பாடா நேற்று ராத்திரி நடு ஜாமத்துக்கு மேலே வீட்டுக்கு அழைத்துக் கிட்டுப் போயிட்டான். காலையிலே எனக்குத் தகவல் கிடைத்தது. நானே போய் அவன் வீட்டிலே குஞ்சிதத்தைப் பார்த்தேன். அவள் தாயாருக்குப் பக்கத்திலே நின்னுக்கிட்டிருந்தா — அதைப் பார்த்ததும் என் சந்தேகமும் தெளிஞ்சு போச்சு—அரை குறையான சந்தேகத்துக்கு உன்னையும் விசாரிக்கலாம்ன்னு வந்தேன். நீதான் அவள் மகாமகத்தும் போது கும்பகோணத்திலே தவறிக் கிடைத்த பெண்ணுன்னு ஆரம்பத்திலேயே சொல்லிட்டேயே......" என்றார்.

"நீங்க சொல்றது சரிதான். இவ்வளவு நாள் நான் தாய்க்குத் தாயாய் தகப்பனுக்குத் தகப்பனாய் வளர்த்தேனே?" என்றான் சின்னக் கண்ணு. அவன் குரல் தழு தழுத்தது. வளர்த்த பாசத்தினால் ஏற்பட்ட துக்கம் நெஞ்சைக் கலங்க வைத்தது. கண்களில் நீர் பெருகியது. பட்டாமணியக்காரர் பச்சாதாபத்தோடு அவனைப் பார்த்தார். அவனிடம் தாழ்வாகவும் சமாதானமாகவும், "நீ வளர்த்தாய்—உண்மை—ஆனால் பெற்றவர்களுக்குள்ள பாத்தியம் போயிடுமா? நீ இவ்வளவு நாள் வளர்த்தும் அந்தப் பெண் தன்னை ஒரு அனாதை என்றுதானே நினைத்துக் கொண்டிருந்திருக்கிறாள்? இல்லாவிட்டால் தனக்குத் தாயார் தகப்பனார் உறவினர் எல்லோரும் இருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டதும் அந்தப் பெண் உன்னை விட்டு விட்டு ஆசையோடு தன் குடும்பத்தாரோடு ஒட்டிக் கொள்வாளா?" என்றார்.

சின்னக் கண்ணு இதைக் கேட்டதும் ஒரு பெருமூச்சு விட்டு மனம் குழம்பிய படியே யோசனையிலாழ்ந்தான். பட்டாமணியக்காரர் கனைத்துக் கொண்டே, "அது போகட்டும் — நீ இத்தனை நாள் அவளை வளர்த்ததற்கு எல்லோரும் சந்தோஷப் படுகிறார்கள். உனக்கு அவங்க என்ன உபகாரம் செய்தாலும் தகும். இந்த வயசான காலத்திலே நாடகத் தொழிலிலே ஈடுபட்டு நீ ஊரூரா அலைய வேண்டாம். கந்தசாமி அந்தப் பெண்ணைக் கலியாணம் செய்துக்கிட்டு உன்னையும் காப்பாற்றுவான். நீ உன் சொந்த மகள் போலவே குஞ்சிதத்தை நினைக்கலாம்" என்றார்.

சின்னக் கண்ணு தலையை ஆட்டிய வண்ணம் "ஒருத்தரை எதிர் பார்த்து வயிறு வளர்க்கிற ஜீவன் இது இல்லேங்க. இத்தனை நாள் நாடோடியாய் இருந்துட்டேன்—வயசாயிடுச்சு. இன்னும் கொஞ்ச நாள்—அதையும் அப்படியே போக்கிடு வேனுங்க. அதுதான் கௌரவம். அவங்க புருசனும் பெண்சாதியும் சௌக்கியமாயிருந்தால் சரிதாங்க. நமஸ்காரம், நீங்க போய் வாருங்க—" என்றான்.

பட்டாமணியக்காரர் சிறிது நேரம் தயங்கினார். அந்த சமயம் அவனைச் சமாதானம் செய்வது கடினமாகப் பட்டது அவருக்கு. "இப்போது உனக்கு மனசு சரியாயில்லை. பிறகு யோசித்துச் சொல்லு" என்று மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு சென்றார்.

சின்னக்கண்ணு மனக் குழப்பத்தோடு தூணில் சாய்ந்தபடியே உட்கார்ந்திருந்தான். குஞ்சிதம் ஒரு புறமாக உட்கார்ந்திருந்தாள். சோமு ஒரு புறம் நின்று கொண்டிருந்தான். ஆர்மோனியம் வடிவேலு, மத்தளக்கார சுப்பய்யா முதலியோர்கள் மூலைக்கு ஒருவராக நவக்கிரகம் போல அவனைச் சுற்றி உட்கார்ந்திருந்தார்கள்.

நெடு நேரம் சென்ற பின் சின்னக் கண்ணு ஒரு முடிவுக்கு வந்து விட்டவன் போல் தலை நிமிர்ந்து "ஏ ரஞ்சிதம்! இங்கே வா!" என்றான்.

ரஞ்சிதம் அவன் எதிரில் வந்து நின்றாள். அவன் தன் குரலைக் கடுமையாக்கிக் கொண்டு "உனக்கு அந்த சோமு மேலே ஆசை இல்லையா? உண்மையைச் சொல்லு" என்றான்.

அவள் தயங்கியபடியே நின்றாள், நெஞ்சிலுள்ளதைத் துணிந்து வெளியே சொல்ல முடியாதவள் போல். அவள் அந்த அதி

என்றார் அனுமதி கூலியாமல் பட்டா மணியக்காரர்.

"வேறொருத்தனா? யாரவன்?" என்றான் குதித்துக் கொண்டே சின்னக் கண்ணு. இது அங்கிருந்த எல்லோருக்குமே மிகுந்த ஆச்சர்யத்தை உண்டாக்கியது.

"அவனும் உரிமையோடுதான் வீட்டிலே அழைச்சுக்கிட்டுப் போய் வைத்திருக்கான்—அது சரி! அந்தப் பெண் உன் பெண்தானா?" என்றார்.

"ஆமாம்!" என்றான் சின்னக்கண்ணு.

"எப்படி? உன் சொந்தப் பெண்ணா?"

"இல்லே நான் வளர்த்த பெண். ரஞ்சிதத்தையும் குஞ்சிதத்தையும் நான் எடுத்து வளர்த்தேன்"

"எடுத்து வளர்த்த பெண்ணா? அது சரி. குஞ்சிதம் உனக்கு எப்படிக் கிடைத்தாள்?"

"போன மகாமகத்தும் போது கும்பகோணத்திலே யாரோ ஒரு குழந்தையைக் கூட்டத்திலே தவற விட்டுட்டாங்க. அந்தக் குழந்தையை ஒப்படைக்கலாம்னு உரியவங்களைத் தேடினேன். அகப்படவில்லே. அதிலே யிருந்து அந்தக் குழந்தையை நானே வளர்த்துக்கிட்டு வரேன், அந்தக் குழந்தைக்குத்தான் குஞ்சிதம்னு பேரு!"

"இந்த ரஞ்சிதம்....?"

"இவளை மதுரையிலே ஒரு ஏழைப் பிச்சைக்காரி விட்டுட்டுச் செத்துப் போயிட்டாங்க. இவளையும் நான் எடுத்து வளர்த்து வந்தேனுங்க."

"நீ வளர்த்த வரையில் சரிதான். நீ வளர்த்ததற்குப் பலன் உன் நாடகத் தொழிலுக்கு உதவியாக இருந்தாங்க இத்தனை நாள். இப்போ அவங்களுக்கு வயசாச்சு பாரு! அவங்களை யாருக்காவது கல்யாணம் செய்து வைத்துக் குடியும் குடித்தனமுமா பார்க்கிறதுதான் உனக்கு அழகு. இல்லாட்டி மாடு தும்பை அறுத்துக் கிட்டுப் போறாப்பிலேதான் போவாங்க. தெரிஞ்சுதா? அது போகட்டும். அதோ நிற்கிறான் பாரு. கந்தசாமி! அவன் குஞ்சிதத்துக்கு அத்தை மகன்; உரிமைக்காரன். அவன் வீட்டிலேதான் அவள் இருக்கா" என்று எதிரில் நின்ற ஒரு வாலிபனைக் காட்டினார் பட்டாமணியக்காரர்.

சின்னக் கண்ணுவுக்கு இது வியப்பாகவும் ஆத்திரமாகவும் இருந்தது. "அத்தை மகனா? ஒரு பெண்ணை இரவோடு இரவா

எங்கோ மறைந்து விட்டது அவர்களுக்கு ஆச்சர்யமா யிருந்தது. சின்னக்கண்ணு கடுமையாகச் சோமுவைப் பார்த்துக் கேட்ட வார்த்தைகளை ரஞ்சிதத்தால் பொறுக்க முடியவில்லை. அவள் சட்டென எழுந்து வந்து "அவருக்கு ஒரு பாவமும் தெரியாது. அவருக்குத் துளிக் கூடக் குஞ்சிதத்தின் பேரில் ஆசையில்லை" என்றாள் நயமான குரலில் சோமுவைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டே.

இவ்வளவு துணிவோடு ரஞ்சிதம் சோமுவுக்காகப் பரிந்து பேச வருவாள் என்று சின்னக்கண்ணு நினைக்கவே இல்லை. அதையும் தவிர அவள் சோமுவைப் பார்த்த பார்வை சின்னக் கண்ணுவின் மன எரிச்சலை அதிகமாக்கியது. ரஞ்சிதம், குஞ்சிதம், சோமு மூவருமே சேர்ந்து ஏதோ சூழ்ச்சி செய்வதாக அவனுக்குத் தோன்றியது. "ஓகோ! அவனுக்குக் குஞ்சிதத்தின் பேரில் ஆசை இல்லையா? தெரியுது-உன் மேலேதான் அவனுக்கு ரொம்ப ஆசைன்னு. நீங்க மூணு பேருமே சேர்ந்து ஏதோ சூழ்ச்சி செய்யறாப் போலேதான் எனக்குப் படுது. நாடோடியா வந்த பயங்கதான் மனதிலே தீவினை வைச்சு துரோகம் செய்யறான்னு நான் எடுத்து வளர்த்த பெண்களும் இப்படித் துரோகம் செய்யுதே!" என்றான்.

"சேர்மான தோஷத்திலே எல்லாம் நடக்கும் வாத்தியாரே!" என்றான் ஆர்மோனியம் வடிவேலு.

"அதுதானே குடியைக் கெடுக்குது!" என்றான் மத்தளக்கார சுப்பய்யா.

சின்னக் கண்ணுவின் உடல் பதறியது. நெஞ்சிலிருந்து ஆத்திரமும் கோபமும் குமுறி வந்தது. "பிழைக்க வகை தேடி ஓட்ட வந்த பசங்களுக்கு இவ்வளவு திமிரு இருந்தா நமக்கு எவ்வளவு இருக்காது? உண்ட வீட்டுக்கு ரெண்டகம் செய்யற பசங்களைக் கொலை செய்தாலும் தேவலையே?" என்று சொல்லியபடியே சோமுவை நெருங்கி "ஏய்! உன்னை நான் லேசிலே விட்டுட மாட்டேன். ஒழுங்கா நடந்துக்கிறவன் மாதிரி இருந்து குடியையே கெடுத்திட்டயே? பேஷ்! சாமர்த்தியக்காரன்தான். குஞ்சிதத்தை ஒளிச்சு வைச்சது மன்னியிலே ரஞ்சிதத்தை வேறே உனக்கு ஒத்துப்பாடத் தயார் செய்திருக்கியே? நீ இங்கிருந்து தப்பி ஓட முடியாது. குஞ்சிதம் வராத வரையிலே உன்னை நான் விட மாட்டேன்!" என்றான்.

இதுவரையில் அமைதியோடும் பொறுமையோடும் இருந்த சோமுவுக்கு எல்லை மீறிய கோபம் வந்தது. நாடகபாணியில் அழகாக நறுக்கி விடப்பட்ட அவனுடைய மீசை துடியாகத் துடித்தது. கண்கள் கோவைப் பழமாகச் சிவந்தன. "மரியாதையாய்த் தூர நின்று பேசு. உன் குஞ்சிதம் எவனோடு ஓடிப் போனாளோ? நீ வேணுமானால் நல்லதங்காளைத் தேடுகிற மாதிரி ஊரூராய்ப் போய்த் தேடு. என்னைப் பிடிக்கலேன்னு நான் வேணுமானால் இந்தக் கூட்டத்திலே யிருந்து விலகிக்கிறேன். அதுக்கு மேலே வீணாய் எங்கிட்டே ஏதாவது பேசினா கெட்டுப் போயிடுவீங்க!" என்று கையை மடக்கி முஷ்டியைக் காட்டினான்.

அவ்வளவுதான். சின்னக் கண்ணு அவன் மீது பாய்ந்து பிடரியைப் பிடித்துத் தள்ளினான். கீழே விழுந்த சோமு சின்னக் கண்ணுவைக் குத்துவதற்காகக் கையைத் தூக்கிக் கொண்டு வேகமாக ஓடி வந்தான். ரஞ்சிதம் ஓடி வந்து இருவருக்கும் குறுக்கே நின்றாள்.

இந்தச் சமயத்தில் அந்த ஊர் பட்டாமணியக்காரர் இரண்டு மூன்று பேர்களுடன் உள்ளே நுழைந்தார். அவர்களைக் கண்டதும் எல்லோரும் பிரமிப்படைந்து நின்றனர்.

"என்னய்யா, நாடக வாத்தியாரே! இங்கே ஏதேனும் கலாட்டாவா?" என்றார் பட்டாமணியக்காரர்.

"இந்தப் பயல் என் பெண் குஞ்சிதத்தை எங்கேயோ அழைத்துக் கொண்டு போய் ஒளித்து வைத்திருக்கிறான்!" என்றான் சின்னக் கண்ணு பதட்டத்துடன் சோமுவை அவருக்குக் காட்டியபடி.

"ஏன் பதட்டப்படுறீங்க—அவனுக்கு ஒரு பாவமும் தெரியாதபோது அவனைப் போய் நீ என் பெண்ணை ஒளிச்சு வைச்சிருக்கயான்னு கேட்டா அவனுக்குக் கோபம் வராமல் என்ன செய்யும்?" என்றார் பட்டாமணியக்காரர் சிரித்துக் கொண்டே.

"இல்லீங்க-இவன்தான் அவளை ஒளிச்சு வைத்திருக்கணும். இந்த ராஜபார்ட்டு போட்டுக்கிற பசங்களே இப்படித்தான்—நான் பார்த்துட்டேன்-அவங்களுக்கு எப்போதும் பெண்கள் மேலேயே குறி—" என்றான் துடியாய்த் துடித்துக்கொண்டே சின்னக் கண்ணு.

".அடடே! கொஞ்சம் பதட்டப் படாமே கேளுமய்யா—அந்தப் பெண் குஞ்சிதத்தை இவன் ஒளிச்சுவைக்கல்லே. அவள் ஓரிடத்திலே பத்திரமாகத்தானிருக்காள் — அவளை நேற்று ராத்திரி வேறொருத்தன் அழைச்சுக்கிட்டுப் போய்த் தன்வீட்டிலே வைத்திருக்கான்!"

பணிவோடு அவன் எதிரில் வந்து நின்ருன். "குஞ்சிதம் எங்கே இருக்காள்னு உனக்கு நிச்சயமாகத் தெரியாதா?" என்று சோமுவைப் பார்த்துச் சந்தேகப் பார்வையுடன் கேட்டான்.

"எனக்குத் தெரியாது. நேற்று ராத்திரி நாடகம் முடிந்தவுடனே திண்ணையிலே வந்து படுத்தேன். அவ்வளவுதான் தெரியும். நல்லாத் தூங்கிட்டேன்."

"காலையிலே நீ எங்கே போயிருந்தாய்? நெடுநேரம் வரையில் காணுமே?"

"பல் துலக்கி முகம் கழுவலாம் என்று வழக்கம் போல ஆற்றங்கரைக்குப் போயிருந்தேன்."

"பொய் சொல்லாதே! உனக்குத் தெரியாமல் குஞ்சிதம் எங்கேயும் போயிருக்க முடியாது. நீதான் அவளை எங்கேயோ ஒளித்து வைத்திருக்கிருய்!"

இதைக் கேட்டதும் சோமு திடுக்கிட்டான். அவனுக்கு இடி விழுந்தாற் போலிருந்தது. அவன் பதறிப் போய், "அட தெய்வமே! கலியப் பெருமாள் ஆணையா எனக்குத் தெரியாது" என்ருன்.

"இந்த ஆணை, சத்தியம் எல்லாம் உனக்கு நாடகத்திலே சொல்லுகிறப் போலே ரொம்ப சகஜம். இப்போதான் தெரியுது உன் முழு யோக்கியதை. நீயும் நெடுநாளா அந்த குட்டி மேலே கண்ணு வச்சிருக்காப்பிலே இருக்குது. இதுக்குத் தானே இந்த ராஜபார்ட் போட்டுக்கிற பயல்களை நான் அடிக்கடி துணியைச் சுருட்டிக் கையிலே கொடுத்து விரட்டி விடறேன்! நீ மத்தவங்க செய்ததையெல்லாம் விடப் பெரிய வேலை செய்துட்டே! உன்னை நான் லேசிலே விட்டுட மாட்டேன்" என்று சீறினன் சின்னக்கண்ணு.

"இப்பவே இவனை இந்த ஊரு பஞ்சாயத்தாரு முன்னலே கொண்டு போய் நிறுத்தி விசாரித்தால்தான் உண்மை வெளிவரும்" என்ருன் சின்னக்கண்ணுவுக்குத் தூபம் போடுவது போல் ஆர்மோனியம் வடிவேலு.

"அதுதான் சரியான வழி" என்ருன் மத்தளக்காரச் சுப்பையாவும்.

"அப்படித்தான் செய்யணும்" என்ருன் பபூன் குப்புசாமி.

ரஞ்சிதம் இவைகளையெல்லாம் தூணுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தபடியே கவனித்து வந்தாள். குஞ்சிதம் எதிர்பாராத வண்ணம் திடீரென்று மறைந்து விட்டது ரஞ்சிதத்துக்கு மனவருத்தத்தைத்தான் கொடுத்தது. கூடப் பிறந்த தங்கையைப போல் பழகிய குஞ்சிதம், ரஞ்சிதத்துக்குக்




கூடத் தெரியாமல் எங்கே மாயமாய் மறைந்திருக்கக்கூடும்? சோமு அவளைக் கடத்திச் செல்ல நினைத்து எங்கேயோ ஒளித்து வைத்திருக்கிருனென்பது அவளால் நம்பமுடியாத கதையாக இருந்தது. அவன் மீது பழி சுமத்துவது அபாண்டம் என்று அவளுக்குப் பட்டது. ஏனென்ருல் சோமுவின் குணம் அவளுக்கு நன்ருகத் தெரியும். அதையும் தவிர சோமுவுக்குக் குஞ்சிதத்தின் பேரில் துளிக்கூட ஆசையும் பற்றுதலும் கிடையாதென்ற ரகசியம் அவளுக்குத்தான் தெரியும். அவனுடைய ஆசையெல்லாம் தன் பேரில் தான் என்பதையும் ரஞ்சிதம் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தாள். அவளுக்கும் அவன் மீது ஆழ்ந்த பற்றுதல் இருந்தது. இது அந்த நாடகக் குழுவில் மற்றவர்களுக்குத் தெரியாமல் இரண்டு உள்ளங்கள் அறிந்த அந்தரங்கம். என்றைக்காவது ஒரு நாள் ஒருவருக்கும் தெரியாமல் அவர்களிருவரும் எங்காவது போய்விடுவது என்று தீர்மானித்திருந்தனர். ஆனல் அதற்குமுன் குஞ்சிதம்

கப்பட்டால் கூடப் போதும். ராஜபார்ட் நடிகருக்குச் சீட்டுத்தான். அவனுடைய துணி மணிகளைச் சுருட்டிக் கொடுத்து, செலவுக்கு இரண்டு ரூபாய் பணத்தையும் கொடுத்து, எங்காவது போய் நல்லபடியாகப் 'பிழை' என்று ஆசீர்வாதம் செய்து அனுப்பிவிடுவான். மறுபடியும் புதிய ராஜபார்ட் நடிகர் வருகிறவரையிலும் சின்னக் கண்ணுவே பிரதான பாத்திரமேற்று நடிப்பான். 'வயது அறுபதுக்கு மேலாகிறதே' என்று தயக்கமோ மயக்கமோ அவனுக்கு ஏற்படாது. பிரகலாதன் வேஷத்தைக் கூடத் தாங்கி வெற்றிகரமாக நடித்துக் காட்டுவதில் அவனுக்கு நிகர் அவனே தான்.

ரஞ்சிதத்தையும் குஞ்சிதத்தையும் சின்னக் கண்ணு தன் மகள்போல் வளர்த்து வந்தான். அவர்களிருவருக்கும் தங்கள் தாய் தகப்பன் யாரென்று தெரியாது. அவர்கள் நினைவுக்கு எட்டிய வரையில் சின்னக் கண்ணுதான் அவர்களுக்குத் தாயாகவும் தகப்பனாகவும் இருந்திருக்கிறான். அவன் அந்த இரண்டு பெண்களையும் அன்பாகவும் செல்லமாகவும்தான் வளர்த்து வந்தான். ஆனால் அந்த இரண்டு பெண்களுக்கும் அவனுடைய கடுமையான கட்டுப்பாடுகள்தான் பிடிக்கவில்லை. ரஞ்சிதத்துக்கு வயது இருபத்திரண்டு. குஞ்சிதம் அவளைவிட ஐந்தாறு வயது சிறியவள்.

அந்த வருஷம் பொங்கல் பண்டிகையின் போது அந்த நாடக கோஷ்டி பெருமாள் கோவில் கிராமத்துக்கு விஜயம் செய்தது. கோவிலுக்குப் பக்கத்திலுள்ள பெரிய சத்திரத்து வாசலில் கட்டை வண்டியை நிறுத்தி ஆர்மோனியத்தையும் மத்தளத்தையும் கீழே இறக்கும் போதே 'நாடகக்காரங்க வந்திருக்காங்க' என்ற செய்தி ஊர் முழுதும் பரவி விட்டது. சிறியோர்களும் பெரியோர்களும் கூட்டம் கூட்டமாக வந்து வேடிக்கை பார்க்கலாயினர்.

அந்த ஊரில் கோயிலுக் கெதிரில் பத்து நாடகங்கள் போடுவதென்று தீர்மானித்தனர். - நாடகம் அன்று இரவிலிருந்தே ஆரம்பமாகியது.

ஐந்து நாடகங்கள் நடந்து விட்டன. ஆறுவது நாள் காலையில் அந்த நாடக கோஷ்டியில் ஒரு கலக்கமும் குழப்பமும் ஏற்பட்டது. சின்னக்கண்ணு சீரும் சிறப்புமாக வளர்த்து வந்த குஞ்சிதம் எங்கோ மாயமாக மறைந்து விட்டதுதான் குழப்பத்துக்குக் காரணம். சின்னக்கண்ணு அவளை எங்கே போய்த் தேடுவான்? அந்தச் சிறிய கிராமத்தில் கூடுமானவரையில் தேடி அலுப்படைந்து விட்டான். எல்லோரும் அவன் எதிரில் கையைப் பிசைந்து கொண்டு நின்றனர். அவனுக்கு ஒரு புறம் கோபமும் மறுபுறம் துக்கமும் பொங்கிப் புகைந்தது. அவன் மனதில் பலவிதமான சந்தேகங்களெல்லாம் எழுந்தன. ராஜபார்ட் சோமுதான் இதற்கெல்லாம் காரணமாயிருக்க வேண்டுமென்று அவன் புத்திக்குப் பட்டது. அவன்தான் ஏதாவது சூழ்ச்சி செய்து குஞ்சிதத்தை ஒளித்து வைத்திருப்பான் என்று நினைத்தான். அவனுடைய சந்தேகத்தை மதி மந்திரிபோலிருக்கும் ஆர்மோனியம் வடிவேலுவிடம் சொன்னான். அவனும் அப்படித்தானிருக்க வேண்டும் என்று ஆமோதித்தான். இந்தச் சந்தேகமும் குழப்பமும் நெடுநேரம் வரையில் மனதை உறுத்திக் கொண்டிருக்கவில்லை. உடனே விசாரணையும் ஆரம்பமாகி விட்டது. "ஏய், சோமு! இங்கே வா!" என்று கூப்பிட்டான் அதிகார தோரணையில். சோமு



# ரஞ்சிதமும் குஞ்சிதமும்




✧ கி.ரா.கோபாலன் ✧

அது ஒரு நாடக கோஷ்டி! ஆடம்பரமான விளம்பரங்களோ காட்சி ஜோடனைகளோ அவர்களுக்குக் கிடையாது. வேஷம் போட்டுக் கொள்வதற்கு மாத்திரம் சில ஆடைகளும் போலி ஆபரணங்களும் உண்டு. நாடகம் நடத்துவதற்குப் பெரிய பட்டினங்களையோ பெரிய கொட்டகைகளையோ அவர்கள் தேடுவதில்லை. சிறிய கிராமங்கள்தான் அவர்களுக்குச் சரியான இடம். அங்குதான் அவர்கள் நாடகத்தைக் கண்டு ரசிக்கும் மனிதர்கள் உண்டு. அங்கேதான் பெருமையும் மதிப்பும் அவர்களுக்குக் கிடைக்கும்.

சின்னக் கண்ணுதான் அந்த நாடகக் குழுவின் தலைவன்; அந்த நாடகக் குழுவிலுள்ளவர்கள் அவனை வாத்தியார் ஐயா என்று கூப்பிடுவார்கள். கதை-வசனம்-பாட்டு-கற்றுக் கொடுப்பது எல்லாம் அவனே. சின்னக் கண்ணுவுக்கு அடுத்தபடியாக அந்த கோஷ்டியில் மதிப்புள்ளவன் அரை குறையாக ஆர்மோனியம் வாசிக்கத் தெரிந்த வடிவேலு. அவனுக்குப் பின் வரிசைக் கிரமமாக மத்தளக்கார சுப்பையா, ராஜபார்ட் சோமு, பபூன் குப்புசாமி முதலியோர். இவர்களைத் தவிர முக்கியமாக இரண்டு ஸ்திரீ நடிகர்களும் உண்டு. ஒருத்தி பெயர் ரஞ்சிதம்; மற்றொருத்தி பெயர் குஞ்சிதம்.

ஒவ்வொரு கிராமத்திலும் ஏற்படும் மதிப்புக்கும் மரியாதைக்கும் தக்கபடி பத்துப் பன்னிரெண்டு நாடகங்களுக்கு மேல் நடத்துவார்கள். சத்தியவான் சாவித்திரியிலிருந்து சம்பூரண ராமாயணம் வரையில் சின்னக்கண்ணு இந்த ஐந்தாறு நடிகர்களையும் இரண்டு பக்க மேளக்காரர்களையும் வைத்து நடத்திக் காட்டி நல்ல பெயர் எடுத்து விடுவான். காட்டு சீன், கடல் சீன்,—மாளிகை சீன் ஒன்றுமில்லாமல் தோப்பிலோ திறந்த வெளியிலோ நாடகமாடி ஜனங்களைப் பிரமிக்க வைக்கும் ஆற்றல் சின்னக்கண்ணு ஒருவனுக்குத்தான் உரித்தானது.

ராஜ பார்ட் போட்டுக் கொள்ளும் நடிகரைத் தவிர சின்னக் கண்ணுவின் நாடகக் கோஷ்டியில் மற்ற எல்லோரும் நிரந்தரமானவர்கள்தான். இதற்குக் காரணம் பிரதான வேடம் தரித்து நடிக்கும் அந்த ராஜபார்ட் ஆசாமி நாடகத்தில் மாத்திரமல்ல, இயற்கையாகச் சாதாரண நேரங்களில் கூட ரஞ்சிதத்தின் பேரிலோ குஞ்சிதத்தின் பேரிலோ காதல் கொண்டு விடுவதுதான். சின்னக் கண்ணுவுக்கு இந்தக் காதல் விஷயம் கட்டோடு பிடிப்பதில்லை. வாலிப வயதில் அப்படித்தானிருக்கும் என்று லேசாக விட்டுப் பிடிக்கும் சுபாவம் அவனுக்குக் கிடையாது. கண்டிப்புத்தான்—அவன் சிறிது சந்தே



சென்னை முத்தியாலுப் பேட்டை A. R. C. பெண்கள் உயர்நிலைப் பள்ளியின் ஸ்தாபகரான ஸ்ரீ கே. இராமய்யச் செட்டியாரும் அவரது மனைவி ஸ்ரீமதி ஆர். தேவகி அம்மாளும் தமக்குச் சொந்தமான ரூ. 70,000 மதிப்புள்ள கட்டிடத்தை இம்மாதம் 1-ம்தேதி மேற்படி பள்ளிக்கூடத்திற்கு நன்கொடையாக அளித்தார்கள். இவ்வைபவத்திற்கு சென்னை கவர்னர் மனைவி பவநகர் மகாராணி தலைமை வகித்தார். மகாராணிக்கு வலது பக்கத்தில் இருப்பவர் ஸ்ரீமதி தேவகி அம்மாள். மேலே இருப்பவர் ஸ்ரீ இராமய்யச் செட்டியார்.

"எனக்குத் தெரியாது. ஆகவே நான் சொல்வதற்கில்லை. பீஜகுப்த மன்னருடைய இஷ்டத்தைப் பொறுத்த விஷயம் அது" என்றான் சுவேதாங்கன்.

யசோதரா தன் தகப்பனாரைப் பார்த்து, "அப்பா! தாங்கள் என் தேச யாத்திரைக்குப் புறப்படவே இல்லை? நான் காசி பார்த்ததே இல்லை. இந்தச் சந்தர்ப்பத்தை ஒரு வியாஜமாக வைத்துக்கொண்டு, நாமும் பீஜகுப்த மன்னருடன் ஏன் காசிக்குப் போய் வரக் கூடாது?" என்று கேட்டாள்.

அவள் சொன்னதில் என்ன தவறு? பாடலிபுத்திர நகரத்திலிருந்து காசி அதிக தூரத்தில் இல்லை; வெகு சமீபத்தில்தான் இருக்கிறது. மிருத்யுஞ்ஜயர் தன் பெண்ணைப் பார்த்து, "அம்மா குழந்தாய்! இவ்வளவு சீக்கிரம் நாம் எப்படித் தேசயாத்திரை புறப்பட முடியும்?" என்று கேட்டார்.

"முடியாத காரியம் என்று ஒன்று உலகத்தில் உண்டா, அப்பா? தாங்கள் உத்தரவு கொடுத்தால் இன்று சாயந்திரத்துக்குள் புறப்படுவதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்துவிடுகிறேன்" என்று உற்சாகத்துடன் சொன்னாள் யசோதரா.

மிருத்யுஞ்ஜயர் சிரித்துக்கொண்டே, "அம்மா யசோதரா! நீ பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய முடியுமானால் செய். எனக்கு யாதொரு விதமான ஆட்சேபனையும் இல்லை. ஆனால் கிழவனான எனக்கு நீ ஒருவிதமான சிரமத்தையும்கொடுக்கக்கூடாது. அவ்வளவுதான்!" என்றார்.

சுவேதாங்கனுக்கு யசோதராவின் மேல் முன்பே மனவருத்தம். பீஜகுப்தனுடன் தேச யாத்திரைக்குப் புறப்பட வேண்டும் என்று யசோதரா தன் விருப்பத்தைத் தெரிவித்ததும் அவனுடைய மனவருத்தம் இன்னும் பன்மடங்கு அதிகமாகி விட்டது. யசோதரா கட்டாயம் பீஜகுப்தனைத்தான் காதலிக்கிறாள். அதனால்தான் காசிக்குப் புறப்படுவதற்கு இவ்வளவு சீக்கிரமாகத் தயாராகி விட்டாள் என்று எண்ணினான் சுவேதாங்கன். ஆனால் அடுத்த கணமே, 'அவள் காதலித்துவிட்டால் மட்டும் காரியம் ஆகிவிடுமா? பீஜகுப்தரும் அல்லவா அவளைக் காதலிக்க வேண்டும்?' என்ற எண்ணம் எழுந்து அவனுள்ளத்துக்குச் சிறிது ஆறுதலை அளித்தது. ஆகவே அவன், "யசோதரா நம்முடன் தேச யாத்திரைக்கு வந்தால் நல்லதுதான். இருவரில் தன்னை யார் காதலிக்கிறார்கள் என்பதையாவது அவள் புரிந்து கொண்டு விடுவாள் அல்லவா?" என்று எண்ணினான்.

யசோதரா சுவேதாங்கனைப் பார்த்து, "ஸ்வாமி! நாங்களும் தங்களுடன் வருகிறோம். இந்த விஷயத்தைத் தயவுசெய்து தாங்கள் பீஜகுப்த மன்னருக்கும் தெரிவியுங்கள்!" என்றாள். (தொடரும்)

யசோதராவின் அந்தச் சொற்களைக் கேட்டதும் சுவேதாங்கனின் முகம் போன போக்கைச் சொல்லி முடியாது. அவன் பேய் அறைந்தவன் போலக் களையிழந்து காணப்பட்டான். அவளுடைய அந்தச் சொற்களில்தான் என்ன பொருள் புதைந்திருந்தது! அந்தச் சின்னஞ்சிறு வாக்கியத்தில் அவ்வளவு பயங்கரமான உண்மையா ஒளிந்திருக்க வேண்டும்? 'யசோதரா சுவேதாங்கனைக் காதலிக்கவில்லை' என்பது தானே அவள் சொன்ன அந்த வாக்கியத்தின் அப்பட்டமான பொருள்!

சுவேதாங்கன் எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு, "அம்மணி! தாங்கள் என்னைக் காதலிக்கவில்லை என்பதை நான் அறிகிறேன். ஆனால் நான் தங்களைக் காதலிக்கிறேன். இந்த விஷயத்தை நான் தங்களிடம் சொல்வது நியாயமில்லை. ஏனெனில் காதல் புரியக்கூடிய பொருளே ஒழிய விளக்கிச் சொல்லக்கூடிய பொருள் அல்ல. காதலை விளக்கிச் சொல்லுவது கடினம்; முடியவும் முடியாது. ஆனால் நான் என்ன செய்வது? சொல்லும்படியான சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது. இம்மாதிரிச் சந்தர்ப்பம் ஏற்படாவிட்டால் நான் இதை இங்கே பிரஸ்தாபித்தே இருக்கமாட்டேன். நான் என் கசப்பான வார்த்தைகளுக்காகவும் அசட்டுத் துணிச்சலுக்காகவும் தங்களிடம் மன்னிப்பு வேண்டுகிறேன்" என்றான்.

யசோதரா எழுந்தவாறே, "ஸ்வாமி! தாங்கள் மன்னிப்புக் கேட்கவேண்டிய அவசியமேயில்லை. நான் இதற்காகத் தங்களைக் குறைகூறவும் இல்லை. தினசரி வாழ்க்கையில் இம்மாதிரி எத்தனையோ நிகழ்ச்சிகள் நடக்கின்றன. எதற்கென்றுதான் மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருக்க முடியும்? அது மட்டும் அல்ல; அடிக்கடி மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தால் ஒரு நல்ல சொல்லுக்கு மதிப்பில்லாமல் அல்லவா போய்விடும்? சரி, நான் போய் அப்பா வந்து விட்டாரா என்று பார்க்கிறேன்!" என்று சொல்லி எழுந்தாள்.

பிறகு யசோதரா அங்கிருந்து புறப்பட்டுச் சென்றாள். தான் மாபெரும் தவறு இழைத்து விட்டதாகத் தோன்றியது சுவேதாங்கனுக்கு. அவன் யசோதராவைக் காண வேண்டும் என்ற ஆசையுடன் வந்திருந்தான். அதிர்ஷ்ட வசமாக அவளைக் கண்டும் விட்டான். அதுவும் தனிமையில் கண்டான். கண்டதோடு மட்டும் அல்ல; அவளுடன் அதிக நேரம் உரையாடிக் கொண்டிருக்கும் பாக்கியமும் கிட்டியது. அவன் தன் முட்டாள்தனத்தினால் யசோதராவுக்குக் கோபம் மூட்டாமலிருந்திருந்தால் இன்னும் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் அவளுடன் பேசியிருந்திருக்கலாம். தன் முட்டாள்தனத்தின் காரணமாக அரிய சந்தர்ப்பத்தைக் கெடுத்துக் கொண்டதை நினைத்தபொழுது அவனுக்குத் தன் மேலேயே ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. இனிமேல் அனாவசியமாக இங்கே உட்கார்ந்திருப்பது வீண் என்று தோன்றியது அவனுக்கு. எந்தக் காரியத்தை உத்தேசித்து அவன் வந்தானோ அது கைகூடுவதற்குப் பதிலாகக் கெட்டு அல்லவா தொலைந்து விட்டது! அவன் எழுந்து வெளியே புறப்படுவதற்காகத் தயங்கித் தயங்கி யோசித்துக் கொண்டிருக்கும் பொழுதே, யசோதராவை அழைத்துக் கொண்டு மிருத்யுஞ்ஜயர் அந்த அறையிலே பிரவேசித்தார். மிருத்யுஞ்ஜயரைக் கண்டதும் சுவேதாங்கன் கை கூப்பி வணக்கம் தெரிவித்தான்.



மிருத்யுஞ்ஜயர் உட்காருமாறு சுவேதாங்கனுக்குக் கைகளினால் ஜாடை காட்டிக் கொண்டே, "உட்காரு, அப்பா சுவேதாங்கா! உட்காரு. ஆமாம், நீ பீஜுருப்தனுடன் தேச யாத்திரைக்குப் போகப் போவதாகக் கேள்விப்பட்டேனே! என்ன, அது உண்மைதானா?" என்று கேட்டார்.

சுவேதாங்கன் வெகு பிரயாசைப்பட்டு இலேசாகச் சிரிப்பை வரவழைத்துக் கொண்டான். "ஆமாம், ஸ்வாமி! நாளைக்கே நாங்கள் புறப்படுவதாக இருக்கிறோம்" என்று பவ்யமாகப் பதில் அளித்தான்.

"எங்கு போவதாக உத்தேசமோ?"

"காசிக்கு"

"எப்பொழுது திரும்புவதாக எண்ணியிருக்கிறீர்கள்?"

என்று ஒரு கணம் சிந்தித்தான். அதை அவனால் சரியாக நிர்ணயித்து ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. ஆனால் யசோதராவின் சொற்களில் சாரம் இருப்பதை அவன் கண்டான். அவள் சொன்ன சொற்கள் அனைத்தும் மிகச் சரியானவையே. அந்தச் சொற்கள் பீஜகுப்தன் விஷயத்திலும் சரியாகப் பொருந்தின. ஏனென்றால் பீஜகுப்தன் தன் பலவீனங்களை நன்கு உணர்ந்திருந்தான். உணர்ந்திருந்ததோடு மட்டும் அல்ல; அவற்றை அகற்றவும் அவன் மனப்பூர்வமாகப் பாடுபட்டுக் கொண்டிருந்தான். அதேபோல அந்தச் சொற்கள் சுவேதாங்கன் விஷயத்திலும் பொருந்தின. ஏனெனில் அவன் பிறர் குற்றங்களைக் கண்டுபிடித்து அவற்றைக் கண்டிப்பதில் தன் பொழுது முழுவதையும் செலவிட்டுக் கொண்டிருந்தான். பிறரிடம் குற்றம் கண்டு பிடிக்கும் தன் கொள்கையை அவன் நியாயமானதென்றே எண்ணினான். அதைத் தவறாக எண்ணவேயில்லை.



யசோதராவின் சொற்களைக் கேட்டதும் அவன் முகம் சுண்டிவிட்டது. அவன் நடுங்கிய குரலில் மிகவும் மெதுவாக, "பீஜகுப்த மன்னரைப் பற்றித் தங்கள் முன்னிலையில் கெட்டவர் என்று சொல்ல நான் முன்வந்தது சிறிதும் நியாயம் இல்லைதான். என் முட்டாள் தனத்துக்காக மன்னிப்புக் கோருகிறேன். தாங்கள் அவசியம் மன்னித்தருள வேண்டும். இனிமேல் நான் என் குற்றங்களைக் களைந்தெறியப் பாடுபடுவேன்" என்று சொன்னான்.

"பீஜகுப்த மன்னரைப் பற்றித் தங்கள் முன்னிலையில் கெட்டவர் என்று சொல்ல நான் முன் வந்தது சிறிதும் நியாயமில்லைதான்!" என்று சுவேதாங்கன் சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்டதும் யசோதராவுக்கு ரௌத்திராகாரமாகக் கோபம் பொங்கி வந்தது. ஆனால் அடுத்த கணமே சுவேதாங்கன் காரணமின்றிக் கோபப்படுவதன் காரணம் விளங்கிவிட்டது. உடனே அவளுடைய முகம் வெளுத்துச் சாம்பல் நிறமாகி விட்டது. "ஸ்வாமி! தாங்கள் பேசும் தோரணையைப் பார்த்தால், தாங்கள் பெரும் பிரமையில் உழலுகிறீர்கள் என்பது நன்கு விளங்குகிறது. அதனால்தான் தங்களுக்கு இவ்வளவு கோபம் வருகிறது என்பதையும் உணருகிறேன். உங்களிடம் ஒரு விஷயத்தை ஒளிவு மறைவின்றிக் கூறிவிட்டால் உங்கள் கோபம் இருந்த இடம் தெரியாமல் பறந்து விடும். தாங்கள் நினைப்பதுபோல, நான் பீஜகுப்தனைக் கனவிலும் காதலிக்கவில்லை. இது முற்றிலும் உண்மை" என்றாள். அதைச் சொல்லும் பொழுதே யசோதராவின் கண்களில் நீர் முட்டியது. அதை மறைப்பதற்காக அவள் முந்தானையினால் தன் முகத்தை மூடிக்கொண்டாள்.

தன் வாயிலிருந்து தன்னை யறியாமலே திடீரென்று அம்மாதிரி வாக்கியம் வந்து விட்டதற்காகச் சுவேதாங்கன் மிகவும் வருத்தமுற்றான். ஆனால் வார்த்தையோ வாயிலிருந்து வெளிவந்து விட்டது! அதை இனி அவன் எப்படி மாற்ற முடியும்? வாயிலிருந்து வெளிவந்த வார்த்தை வெளிவந்ததுதானே? அவன் யசோதராவின் எதிரே இரு கைகளையும் கூப்பிக் கொண்டு, "யசோதரா தேவி! என்னை மன்னியுங்கள். நான் ஏதோ அறியாமல் மாபெரும் தவறு இழைத்து விட்டேன். நான் அந்தச் சமயம் தன் நிலையில் இல்லை. என் வாயிலிருந்து அவ்வளவு கசப்பான வார்த்தைகள் வெளிவந்ததற்குக் காரணம் ஒருவேளை உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம்" என்றான்.

காரணத்தை ஒருவாறு ஊகித்தறிந்து கொண்டு விட்ட பொழுதிலும், சுவேதாங்கனுடைய வாய் மூலமாகவே கேட்கவேண்டும் என்ற நோக்கத்தில் யசோதரா, "என்ன காரணம்?" என்று கேட்டாள்.

"நான் தங்களைக் காதலிக்கிறேன். அதனால்தான்..." என்றான் சுவேதாங்கன்.

யசோதரா சுவேதாங்கனைப் பார்த்தாள். அவளுடைய நாணமற்ற நயனங்கள் சுவேதாங்கனின் கண்களுடன் கலந்தன. "ஸ்வாமி! தாங்கள் சொல்லுவது மிகவும் ஆச்சரியமாக அல்லவா இருக்கிறது!" என்று அகல விரிந்த கண்களுடன் கேட்டாள்.



என்பதுதான் என்னுடைய முடிவு. பீஜகுப்த மன்னர் சித்திரலேகாவை ஒரு நடன ராணியாகக் கனவிலும் கற்பனை செய்ததில்லை. அதுமட்டும் அல்ல; அவளைத் தன் வாழ்க்கையிலும் நடன ராணி என்ற முறையில் ஏற்றுக் கொள்ளவில்லை. சித்திரலேகாவை அவர் தன் மனைவிக்குத் துல்லியமாகவேதான் பாவித்தார். மனைவிக்குத் துல்லியமாகப் பாவித்தார் என்று சொல்லுவதுகூடத் தவறு, மனைவியாகவே எண்ணினார் என்று சொல்லுவதுதான் சரி. இந்த விஷயத்தை நானும் அறிவேன்; தாங்களும் அறிவீர்கள். ஏன், இந்த உலகம் முழுவதுமே அறியும். இதில் ஒளிவு மறைவு சிறிதும் கிடையாது. அத்துடன் நாம் இன்னொரு விஷயத்தையும் மறந்து விடக்கூடாது. மனிதன் என்று பிறந்துவிட்டால் பலவீனம் இல்லாமல் இருப்பதில்லை. ஒவ்வொரு மனிதனுக்கும் ஏதாவதொரு பலவீனம் உண்டு. மனிதன் ஒருபொழுதுமே பூரணமானவன் அல்ல. ஒரு மனிதனிடத்தில் சில பலவீனங்களைக் கண்டு அவனைக் குறைகூறிக் குற்றவாளி ஆக்குவதோ அல்லது அவனுடன் விரோதம் பாராட்டுவதோ சிறிதும் நியாயம் இல்லை. ஏனென்றால் இம்முறையை அநுஷ்டிப்பதனால் ஒரு மனிதன் இன்னொரு மனிதனின் நண்பனாக ஒருகாலும் ஆகமுடியாது. பிறர் குறையைக் காண்பதிலேயே கருத்தைச் செலவிட்டிருக்கும் மனிதன் உலகத்தில் உள்ள ஒவ்வொருவரிடமும் குற்றக் குறைகளைக் கண்டு பிடிப்பதிலும் அவர்களைக் கெட்டவர்கள் என்று சொல்லுவதிலும்தான் தன் மூளை முழுவதையும் செலவிடுவான். கடைசியில் அவன் எல்லோரையுமே தன்னுடைய விரோதிகளாக எண்ணத் தொடங்கினால் ஆச்சரியப்படுவதற்கில்லை. அதன் பலனாகக் கடைசியில் அவனுடைய வாழ்க்கையே ஒரு பெரும் சுமையாக மாறிவிடக்கூடும். ஆகவே ஒரு மனிதனின் பலவீனத்தைக் கண்டு களித்துக் குற்றம் சாட்டாமல் அவனிடம் ஆழ்ந்த அநுதாபம் கொள்ளுவதுதான் மனிதனுடைய மிகச் சிறந்த கடமையாகும்" என்றான்.

சுவேதாங்கனின் விரோத மனப்பான்மை அவனுடைய அறிவை முற்றிலும் மழுங்கச் செய்துவிட்டது. ஆகவே அவன், "அநுதாபம் காட்டுவதற்கோ, கருணைபுரிவதற்கோ கடமையில் எள்ளளவும் இடம் கிடையாது. பலவீனங்களைச் சுட்டிக்காட்டி அவற்றை நிந்தித்தோ கண்டித்தோ அகற்ற முற்படுவதுதான் நியாயமும் நேர்மையுமான செய்கை ஆகும்!" என்றான்.

அதைக் கேட்டதும் யசோதரா 'களீர்' என்று சிரித்துவிட்டாள். "ஸ்வாமி! தன் குற்றம் தனக்குத் தெரிவதில்லை. பிறர் குற்றம் கண்களை உறுத்தும். இது உலகத்தின் இயல்பு. தன் குற்றங்களைக் குணமாகக் கொள்ளுவது இந்த உலகத்தின் ஒரு வழக்கமாகி விட்டது. மனிதன் முதலில் தன் குற்றங்களைக் களைந்தெறிய வேண்டும். என்னைக் கேட்டால் எவன் ஒருவன் தன் பலவீனங்களைக் களைந்தெறியப் பாடுபடுகிறானோ அவனைத்தான் உலகத்திலேயே உயர்ந்தவன் என்பேன்" என்றாள்.

யசோதராவின் கடைசி வாக்கியம் சுவேதாங்கனின் உள்ளத்திலே அம்பு போலத் தைத்தது. 'யசோதரா தன்னைத்தான் குத்திக் காட்டுகிறாளா, என்ன?'

மறந்து தன் மனதைத் தேற்றிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் அவர் தேச யாத்திரை போய் வர உத்தேசித்திருக்கிறார். சித்திரலேகாவைப் பிரிந்ததனால் அவருக்கு ஏற்பட்டுள்ள துயரத்தை இவ்வளவு அவ்வளவு என்று சொல்லி முடியாது. அவர் வெளியே எங்கும் போகாமல் பாடலிபுத்திர நகரத்திலேயே தங்கி இருப்பாரானால், தற்கொலை செய்து கொண்டாலும் செய்துகொண்டு விடுவார்" என்றான்.



அதைக் கேட்டதுதான் தாமதம்; யசோதராவின் முகம் 'குப்'பென்று வெளுத்துவிட்டது; வியர்த்து விறுவிறுத்தும் விட்டது. "ஸ்வாமி! தாங்கள் சொல்லுவது ரொம்பவும் நியாயமான வார்த்தை. பீஜகுப்த மன்னரை நானும் ஓரளவு புரிந்து கொண்டிருக்கிறேன். ஆகவே தாங்கள் கூறுவதில் சாரம் இருக்கிறது என்பதையும் உணர முடிகிறது. அவர் அம்மாதிரி செய்து கொள்ளக் கூடியவர் தான். சித்திரலேகா தன்னை விட்டுப் பிரிந்துபோன துயரத்தில் அவர் தற்கொலை செய்து கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லைதான். மிக மிக மேலான புருஷர் பீஜகுப்த மன்னர். அவரிடம் குறை கண்டுபிடிப்பதென்றாலே எனக்குக் குலை நடுக்கம் எடுக்கிறது. அவரிடம் லவலேசம்கூடக் குற்றம் குறை கண்டுபிடிக்க முடியாது. தாங்கள் சொல்வதைக் கேட்டு எனக்கு அவர்மீதுள்ள சிரத்தையும் பக்தியும் இன்னும் பன்மடங்கு அதிகமாகின்றன. அவரைப் போன்ற உத்தமரை உலகத்திலேயே காணமுடியாது" என்றாள்.

சுவேதாங்கனுக்குக் கோபம் எல்லை மீறி விட்டது. அவன் வெறி பிடித்தவனைப் போல, "யசோதரா! கேவலம் ஒரு கடைமாதின்மீது மையல்கொண்டு பித்துப் பிடித்துத் திரிவது பீஜகுப்தருக்கோ—அல்லது அவரைப் போன்ற வேறு ஆண்களுக்கோ அழகாகுமா? அவரைப் போன்றவர் பெண் பித்துப் பிடித்துத் திரிவது எவ்வளவு தூரம் உசிதமானது என்பதை என்னால் சரிவரப் புரிந்து கொள்ளவும் முடியவில்லை; சொல்லவும் முடியவில்லை. இன்னொரு விஷயம். கஷ்டமோ, நஷ்டமோ ஏற்படும்போது மனிதன் தன் மன உறுதியைத் தளரவிடக் கூடாது. அவற்றை எதிர்த்து வெற்றி கொள்ள முயலவேண்டும். ஒருவன் தன் மன உறுதியைத் தளரவிடுவானானால் அது அவனுடைய மனோ பல வீனத்தைத்தான் காட்டுகிறது! ஆகவே, மனோபலவீனத்தை மனிதனுடைய குறை என்று சொல்லுவதில் என்ன தவறு?" என்று கேட்டான்.

சுவேதாங்கன் காரணமின்றிக் கோபித்துக் கொள்ளுவதன் கருத்தை யசோதராவினால் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவள் தன் குரலில் கம்பீரத்தை வரவழைத்துக்கொண்டு, "ஸ்வாமி! தாங்கள் சொல்லுவது நியாயமாகவே இருக்கலாம். தாங்கள் சொல்வதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் ஒன்று மட்டும் என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. தாங்கள் என்ன சொன்னாலும் பீஜகுப்த மன்னர் மீது யாதொருவிதமான குற்றமும் கிடையாது

# சித்திரலேகா

ஸ்ரீ பகவதி சரண் வர்மா

## இருபத்திரண்டாம் அத்தியாயம்

## வாதம் வளர்ந்தது!

பீஜகுப்தனிடம் விடை பெற்றுக் கொண்டதும், சுவேதாங்கன் நேரே மிருத்யுஞ்ஜயரின் மாளிகையை அடைந்தான். அப்பொழுது மிருத்யுஞ்ஜயர் மாளிகையில் இல்லை. எங்கோ வெளியே போயிருந்தார். சுவேதாங்கன் தான் வந்திருக்கும் விஷயத்தை யசோதராவுக்குச் சொல்லி அனுப்பினான்.

இளைப்பாறும் மண்டபத்திலே சுவேதாங்கனை யசோதரா சந்தித்தாள். இருவரும் ஒருவரை ஒருவர் வணங்கிக் குசலப் பிரச்னம் விசாரித்துக் கொண்டனர். பிறகு பக்கத்தில் இருந்த ஆசனத்தில் இருவரும் அமர்ந்தனர். சிறிதுநேரம் வரை அவர்களிடையே அமைதி நிலவியது. கடைசியில் சுவேதாங்கன் முதன் முதலாகப் பேச்சை ஆரம்பித்து வைத்து அங்கே நிலவியிருந்த மௌனத்தைக் கலைத்தான்.

“அம்மணி! நாளைக்கு நான் பீஜகுப்த மன்னருடன் பாடலிபுத்திர நகரத்தை விட்டு வெளியே போகப் போகிறேன். நாங்கள் திரும்பிவர எத்தனை நாட்கள் ஆகுமோ, தெரியாது! ஆகவே உங்களிடம் விடை பெற்றுப் போவதற்காக வந்திருக்கிறேன்” என்றான் சுவேதாங்கன்.

அதைச் சொல்லி முடித்ததும், அவன் யசோதராவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். யசோதராவின் முகத்திலே யாதொரு விதமான உணர்ச்சி மாறுதலும் தென்படவில்லை. “என்ன, பீஜகுப்த மன்னர் வெளியூருக்குப் போகப்போகிறாரா? அவர் நேற்று இங்கே வந்திருந்த பொழுது பாடலிபுத்திர நகரத்தை விட்டு வெளியே போக உத்தேசித்திருப்பதாகத் தகவல் ஒன்றும் சொல்லவில்லையே!” என்று கேட்டாள்.

யசோதரா தன்னைச் சற்றும் பொருட்படுத்தாமல் பீஜகுப்தனுடைய பேச்சை எடுத்தது சுவேதாங்கனுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அவனுக்கு அவள் மீது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. “ஆம், அம்மணி! பீஜகுப்த மன்னரை விட்டுவிட்டுச் சித்திரலேகா தீக்ஷை பெறும் நோக்கத்துடன் யோகி குமாரகிரியிடம் போய் விட்டாள். அதனால்தான் அவர்......” என்று ஆரம்பித்தான் சுவேதாங்கன்.

அதைக் கேட்டதும் யசோதராவுக்குத் தூக்கி வாரிப்போட்டது. “என்ன சொன்னீர்கள்? சித்திரலேகா வைராக்கிய வாழ்க்கையை மேற்கொண்டு விட்டாளா? ஆச்சரியமாக இருக்கிறதே, நீங்கள் சொல்லுவது!......அப்படியானால் பீஜகுப்த மன்னருடைய மனம் புண்பட்டிருக்கக் காரணம் இருக்கிறது” என்றாள். அதைச் சொல்லி முடித்ததும் யசோதரா சிறிது நேரம் மௌனம் சாதித்தாள். பிறகு, “நான் முதன் முதலாகச் சித்திரலேகாவைப் பார்த்த அன்றைக்கே தெரிந்து கொண்டு விட்டேன். அவள் ஒரு தெய்வம்தான். பீஜகுப்த மன்னருக்காக அவள் மகத்தான தியாகம் செய்யக் கூடியவள்தான். சந்தேகமில்லை!” என்றாள்.

தன்வினை தன்னைச்சுடும் என்பார்களே, அது போல் யசோதராவின் மனதைப் புண்படுத்தப் போய் சுவேதாங்கனின் மனமே புண் பட்டு விட்டது. அவனுடைய உள்ளத்திலே யசோதராவின் மனதை இன்னும் நோகச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் வலுத்தது. ஆகவே அவன் யசோதராவைப் பார்த்து, “பீஜகுப்த மன்னர் சித்திரலேகா ஒருத்தியைத் தவிர வேறு எந்தப் பெண்ணையுமே காதலிக்கமாட்டார்; கண் எடுத்தும் பார்க்க மாட்டார். அவரை எனக்கு நன்குத் தெரியும். வேறு பெண்ணைக் காதலிப்பது என்பது அவரால் நடவாத காரியம். சித்திரலேகா தன்னைப் பிரிந்து சென்ற துயரத்தை அவரால் தாள முடியவில்லை. அவளுடைய பிரிவுத் துயரை எப்படியாவது

வது முழு மோசம்! அநியாயம்! அயோக்கியத்தனம்!" என்றார்.

"என்ன, நானா அயோக்கியத்தனம் செய்கிறேன்? தாங்கள் அப்படிச் சொல்வதற்கு என்ன நியாயம் இருக்கிறது? என்னுடைய விமான குருய்ஸரில் ஏதாவது கோளாறு இருக்கிறதா? இல்லை. அது முதல்தரமானது. நான் கண்டுபிடித்த பீரங்கியில் ஏதாவது குறை இருக்கிறதா? இல்லவே இல்லை. அது ஓர் அபூர்வ சிருஷ்டி. அப்படியிருக்கும்போது தாங்கள் ஏன் என் மீது அநாவசியமாகக் குறை சொல்ல வேண்டும்? நான் பொய் சொல்லித் தங்களை ஏமாற்றிவிட்டேனா?"

"நீர் முதலில் இந்தக் கவசத்தை எங்களுக்குக் கொடுத்திருக்க வேண்டும்."

"அது எப்படி முடியும்? யுத்த சாஸ்திரத்தைப் படிப்படியாகத்தானே வளர்க்க வேண்டும். தாங்கள் கூறுவதுபோல ஒரேயடியாகத் தாண்டிக் குதித்துவிட முடியாது."

சற்று நேரம் வரை இருவரும் பேசவில்லை. சேனாபதி குழப்பத்தில் அகப்பட்டுத் தத்தளித்த வண்ணமாக இருந்தார். இளைஞன் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துப் புகையை ஊதினான். கடைசியில் சேனாபதி ஒரு முடிவுக்கு வந்தவர்போல, "சரி, இதற்கு எவ்வளவு பணம்?" என்று கேட்டார்.

"பத்துலட்சம் பவுன்" என்றான் இளைஞன் அலட்சியமாக.

"ஐந்து லட்சம் போதாதா?"

"ஊஹூம்; அதில் ஒரு ஷில்லிங்கூடக் குறைக்க மாட்டேன். இதை வேறு நாட்டுக்கு விற்றால் இருபது லட்சம் பவுன்கூட எனக்குக் கிடைக்கும்."

"உண்மை! உண்மை!" என்று சொல்லி விட்டுப் பெருமூச்சு விட்டார் சேனாபதி. கடைசியில் மீண்டும் பத்து லட்சம் பவுனுக்கு ஒருசெக் எழுதி அதை இளைஞனிடம் கொடுத்தார்.

இளைஞன் எழுந்து சேனாபதியின் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டுப் புறப்பட்டான். ஒரு அடிதான் அவன் எடுத்து வைத்திருப்பான். அதற்குள் சேனாபதி திடீரென்று ஏதோ ஞாபகம் வந்தவர்போல "மிஸ்டர்! ஒரு நிமிஷம்!" என்றார்.

இளைஞன் திரும்பிவந்தான்.

"இந்தக் கவசத்தை பீரங்கிக் குண்டுகள் துளைக்க முடியாது அல்லவா?"

"ஆம்; இப்போதுள்ள பீரங்கிகள் எதுவும் அதைத் துளைக்க முடியாது. ஆனால் இனிமேல் அதைத் தகர்க்கக் கூடிய பீரங்கிகள் கண்டு பிடிக்கப்படலாம் அல்லவா?"

"அத்தகைய பீரங்கிகள் கண்டுபிடிக்கப்படுமென்று நீர் உறுதியாக நம்புகிறீரா?"

"நம்புவதாவது! அவற்றை ஏற்கெனவே கண்டுபிடித்தாகி விட்டதே!"

சேனாபதி மிக்க திகிலுடன், "யார் அதைக் கண்டு பிடித்தது?" என்று கேட்டார்.

"வேறு யார்? நானேதான்!"

"நாசமாய்ப் போச்சு! இதை நீர் ஏன் முன்னமே சொல்லவில்லை?"

"யுத்த சாஸ்திரம் படிப்படியாகத்தான் வளர வேண்டுமென்று நான் சொல்லவில்லையா?"

சேனாபதிக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. அவருக்கு உண்மையாகவே பைத்தியம் பிடித்துவிடும் போல இருந்தது. அவர் கூறியதாவது: "இப்போது இந்த பீரங்கியை நான் வாங்கியாக வேண்டும். இதை நான் வாங்கியபிறகு வேறொரு புதுக் கவசத்தைக் கண்டுபிடித்திருப்பதாகச் சொல்லுவீர்—இல்லையா?"

"ஆம்"

"அந்தக் கவசத்துக்காகப் பத்து லட்சம் பவுன் எங்களிடமிருந்து பிடுங்கிய பிறகு, நீர் இன்னொரு பீரங்கியைக் கண்டு பிடிப்பீர்; அப்புறம் இன்னொரு கவசத்தைக் கண்டுபிடிப்பீர்—அப்படித்தானே?"

"ஆம், அதில் என்ன சந்தேகம்?"

சேனாபதி கைகளைப் பிசைந்துகொண்டே, "அயோக்கியா! கொள்ளைக்காரா! வஞ்சகா! நீ நாசமாய்ப் போக! உன் ஏழேழு தலைமுறையும் நிர்மூலமாய்ப் போக! நீ யார்? உன் பெயர் என்ன?" என்று கேட்டார்.

இளைஞனின் முகத்தில் கோபம் பொங்கியது. அவன் சொன்னான்: "நீர் என்னை எவ்வளவு திட்ட வேண்டுமோ அவ்வளவும் திட்டும். ஆனால் என் பெயரைச் சொல்ல மாட்டேன். உமக்குக் கொஞ்சமாவது விவேகம் இருந்தால் நான் சொல்வது முற்றிலும் பகுத்தறிவுக்கு ஒத்தது என்பதை உணர்ந்து கொள்வீர். புதுப் புது ஆயுதங்களால் நீர் மனித குலத்தைப் பத்து வருஷங்களில் கொன்றால் என்ன, பத்து விநாடிகளில் கொன்றால் என்ன? நான் உண்மையைச் சொன்னேன். ஆனால் நீரோ என்னைத் திட்டுகிறீர். எனக்கு நஷ்டம் எதுவும் இல்லை—வந்தனம், நான் போய் வருகிறேன்."

கதவைப் 'படார்' ரென்று சாத்திவிட்டு இளைஞன் அவ்விடத்தை விட்டு விரைந்து சென்றான். சேனாபதி விழித்தார்.

"முதலில் ஒரு விமான குருய்ஸரை நீர் கண்டு பிடித்தீர். பிறகு, அதைத் தூள் தூளாக்குவதற்கு ஒரு பீரங்கியையும் நீரே கண்டு பிடித்தீரா? வெட்கமாக இல்லையா உமக்கு?" என்றார் அவர்.

இளைஞன் சிரித்து விட்டுச் சொன்னான்: "நான் என்னத்துக்காக வெட்கப்பட வேண்டும்? யுத்த சாஸ்திரம் படிப்படியாக வளர்ந்து வருகிறது என்பது உங்களுக்குத் தெரியாதா? ஏதாவது ஒரு புதுக் கருவி கண்டுபிடிக்கப் பட்டால் அதற்கு ஒரு எதிர்க் கருவியையும் கண்டுபிடித்தாக வேண்டும். நான் கண்டு பிடித்த விமான குருய்ஸர் இருக்கிறதே, அது மகா பயங்கரமான ஆயுதம். ஆகையால், அதற்கு எதிர்க்கருவி ஒன்றைக் கண்டு பிடிக்க வேண்டியது அவசியமாகி விட்டது."

சேனாபதி சற்று நேரம் யோசனை செய்து விட்டுக் கூறினார்: "ஆம், நீர் சொல்லுவது ஒரு வகையில் உண்மை தான். ஆனால் அந்த பீரங்கியை வேறு யாராவது கண்டுபிடித்து என்னிடம் கொண்டு வந்திருந்தால் அதற்கு அர்த்தம் இருக்கிறது. நீர் கண்டு பிடித்த குருய்ஸரை நாசமாக்குவதற்கு நீரே ஒரு பீரங்கியையும் கண்டு பிடித்துக் கொண்டு வருவதென்றால்......"

"அட கடவுளே! நான் கொண்டு வந்தால் என்ன? — வேறு யார் கொண்டு வந்தால் என்ன? இதில் பிரமாதமாக என்ன வித்தியாசம் வந்து விடப் போகிறது? நான் வெளியே போய், என் மீசையை எடுத்து விட்டு, வேறு உடை அணிந்துகொண்டு, திரும்பி வந்து, இதைச் சொல்லியிருந்தால் ஒப்புக்கொண்டிருப்பீர்களாக்கும்?—அப்படித்தானே?"

சேனாபதி அவனைப் பாராட்டினார். "விமான குருய்ஸரைக் கண்டு பிடித்ததும் அல்லாமல் மிக்க சக்தி வாய்ந்த ஒரு பீரங்கியையும் கண்டு பிடித்து விட்டீரே! உம்முடைய புத்தி நுட்பத்தைப் புகழ்கிறேன்" என்றார் அவர்.

வாலிபன் சிரித்து விட்டு, "தாங்கள் என்னை அளவுக்கு மீறிப் புகழுகிறீர்கள்" என்றான்.

"இல்லை, இல்லை! உண்மையைத்தான் சொல்லுகிறேன்."

"மிக்க சந்தோஷம். ஆனால் தாங்கள் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். எவ்வளவு சக்தி வாய்ந்த கருவியாக இருந்தாலும், அதற்கும் ஒரு எதிர்க்கருவி அவசியம் இருந்தே தீரும்."

"இருக்கலாம். ஆனால் இந்த பீரங்கியை எதிர்க்கக் கூடிய சக்தி வாய்ந்த ஆயுதம் எதுவும் இருக்க முடியாது."

"ஆம், ஆம்! என் பீரங்கி மிக்க சக்தி வாய்ந்ததுதான். ஆனால்—"

இளைஞன் மீண்டும் உட்கார்ந்தான். சேனாபதி பீதியுடன் அவனை உற்று நோக்கினார். வாலிபன் கூறினான். "தங்களிடம் ஓர் இரகசியத்தைக் கூற விரும்புகிறேன். நான் ஒரு வகையான இரும்புக் கவசம் கண்டு பிடித்திருக்கிறேன். அந்தக் கவசத்தை மேற்படி விமான குருய்ஸர் மீது போட்டு மூடினால் இந்த பீரங்கி அதை ஒன்றும் பண்ணவே முடியாது. அது அவ்வளவு உறுதியானது."

சேனாபதிக்கு ஆத்திரம் உண்டாயிற்று. "என்ன இது! சுத்தப் பைத்தியக்காரத் தனமாக அல்லவா இருக்கிறது! நீர் செய்

இதைக் கேட்டு சேனாபதி சற்று வெட்கம் அடைந்தார். இளைஞன் கூறியது முற்றிலும் உண்மையாகவே அவருக்குத் தோன்றியது.

"ஆகட்டும்; இந்த பீரங்கியையும் நாங்கள் வாங்கிக் கொள்கிறோம் அதை நீர் வேறு யாருக்காவது விற்று விட்டால் எங்கள் நிலைமை ஆபத்தாகி விடும் அல்லவா?—இதன் விலை என்ன?"

"பத்து லட்சம் பவுன்."

சேனாபதி மீண்டும் பத்து லட்சம் பவுனுக்கு ஒரு செக் எழுதி அந்த வாலிபனிடம் கொடுத்தார்.

இளைஞன் புறப்படுவதற்காக உடனே எழுந்தான்.



"சரி" என்ற பதிலை அதில் தேடியது அந்தப் பார்வை.

"நாழிகை ஆகி விடுமே என்று பார்க்கிறேன்" என்று இழுத்தாற்போல் சொல்லி விட்டு அந்தப் பக்கம் திரும்பினான் கோபு. பாபுவுக்கு கண குஷி.

'போட்டாபோட்டி காட்டா குஸ்தி'க்காக வெளியூரிலிருந்து பிரபல பயில்வான்கள் வரவழைக்கப்பட்டார்கள். அன்று எக்ஸிபிஷனில் அதுதான் முக்கியமான நிகழ்ச்சி. அதற்கென்று தனிக் கட்டணம் வைத்திருந்தார்கள். நல்ல வசூல். நல்ல கூட்டம். பந்தயம் ஆரம்பிக்கப் போகும் சமயம். பயில்வான்கள் மைதானத்திற்குள் நுழைந்தார்கள். அவர்களைச் சுற்றிப் பெருங்கும்பல் ஒன்று தள்ளிக் கொண்டு வந்தது. அந்தக் கும்பலில் சிறுவர்கள் இருவரும் சிக்கிக் கொண்டார்கள். எங்கேயோ பராக்குப் பார்த்துக் கொண்டிருந்த பாபு கோபுவின் கரத்திலிருந்து தனியாக விடுவிக்கப்பட்டு வேறு பக்கம் இழுத்தெறியப்பட்டான். "பாபு! பாபு!" என்று இரண்டு மூன்று முறை கோபு கூப்பிட்டான். "கோபு! கோபு!" என்று நாலு தரம் பாபு எங்கிருந்தோ கூவினான். ஆனால் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள முடியவில்லை.



இலக்கங்களிலேயே ருஷ்ய சர்வாதிகாரி ஸ்டாலின் படம் போடப்பட்டிருக்கிறது. இதில் எத்தனை இலக்கங்கள் இருக்கின்றன என்பதைக் கண்டுபிடியுங்கள்.

மைக் சப்தம், ரேடியோ இரைச்சல், பொது ஜனங்களின் ஆரவாரம் குஸ்தி நடக்கும் இடத்திலிருந்தெழும் கூச்சல் எல்லாமாகச் சேர்ந்து இரு இளம் குரல்களையும் அமுக்கி விட்டன.

ஜம்புதான் அகப்படவில்லை யென்றால் தம்புப் பயலையும் காணோமே! பாபு தனியாக அவர்களைத் தேடினான். அவனுடைய முயற்சி வியர்த்தமாயிற்று. அவர்கள் எங்கே போயிருப்பார்கள்? பாபுவுக்கு ஒன்றுமே புரியவில்லை. எப்படி வீட்டிற்குத் திரும்பிப் போவது? மாமாவின் வீட்டு விலாசம்கூட சரியாகத் தெரியாதே! அவனுக்கு அழுகை பொங்கிக் கொண்டு வந்தது. **(தொடரும்)**

# அவருடைய நன்றி

பெர்னார்ட் ஷா ஆங்கிலத்தில் புகழ் பெற்ற எழுத்தாளர். பல அற்புதமான நாடகங்களை அவர் எழுதியிருக்கிறார். தம் எழுத்து வன்மையின் மூலம் அவர் லட்சக் கணக்கான பணத்தைச் சம்பாதித்துள்ளார். தாம் எழுதும் ஒவ்வொரு வார்த்தைக்கும் குறைந்த பட்சம் ஒரு ஷில்லிங்காவது அவர் வாங்குவது வழக்கம். பணம் வாங்காமல் ஒரு எழுத்தைக்கூட அவரிடமிருந்து எழுதி வாங்குவது கஷ்டம்.

அவருடைய நாடகங்களைப் படித்து அதில் மனதைப் பறிகொடுத்த ஓர் அன்பர், அவர் கைப்பட ஏதாவது ஒரு வார்த்தையாவது எழுதி வாங்கி, அதைத் தம் வீட்டில் கண்ணாடி போட்டு மாட்ட வேண்டுமென்று ஆசைப்பட்டார். அவரிடம் பணம் அதிகமாகக் கிடையாது. ஆகையால் ஒரே ஒரு ஷில்லிங் மாத்திரம் ஷாவுக்கு அனுப்பி, தம்முடைய விருப்பத்தையும் ஒரு கடிதத்தில் தெரிவித்திருந்தார்.

கொஞ்ச காலம் கழிந்தது. பெர்னார்ட் ஷாவிடமிருந்து கடிதம் எப்போது வரும் என்று அவர் காத்துக் கொண்டே இருந்தார். ஒரு நாள் அந்தக் கடிதமும் வந்தது. அவர் ஆவலாகக் கடிதத்தை வாங்கி அதை உடைத்தார். ஷா என்ன எழுதியிருக்கிறார் என்று பரபரப்பாகப் பார்த்தார். வந்தனம் என்று அந்தக் கடிதத்தில் எழுதப் பட்டிருந்தது!

★ ★ ★ அணுகுண்டை விடப் பன்மடங்கு சக்திவாய்ந்த ஜலவாயு குண்டைத் தயாரிப்பதில் இப்போது அமெரிக்கா முனைந்திருக்கிறது. ஜலவாயு குண்டால் உலகத்துக்குப் பெருத்த அனர்த்தமும் ஆபத்தும் ஏற்படும் என்று பிரபல விஞ்ஞானியான ஐன்ஸ்டீன் எச்சரிக்கிறார். உலக வல்லரசுகள் ஒன்றோடொன்று போட்டி போட்டுக்கொண்டு நாசகர ஆயுதங்களைத் தயாரிப்பது எவ்வளவு முட்டாள் தனமானது என்பதையும், அழிவுக் கருவிகள் கண்டுபிடிக்கத் தொடங்கினால் அதற்கு முடிவே இராது என்பதையும், ஒரு பழைய ருஷ்ய ஆசிரியர் எழுதிய இக்கதை எவ்வளவு அழகாக விளக்குகிறது! ★ ★ ★

# சேனைபதியின் ஆத்திரம்

மொழிபெயர்ப்பு : சபரி

ஒரு நாள் ஓர் இளைஞன் ஏதோ ஒரு தேசத்து யுத்த இலாகாக் காரியாலயத்துக்குள்ளே நுழைந்து, யாரோ ஒரு அதிகாரியை நோக்கி, "உங்கள் சேனைபதியை நான் பார்க்க வேண்டும்" என்றான்.

அதிகாரி அவனை உற்றுப் பார்த்துவிட்டு, "ஏன்? என்ன விசேஷம்?" என்று கேட்டார்.

"நான் புதிதாக ஒரு கருவி கண்டு பிடித்திருக்கிறேன். அது யுத்த சாஸ்திரத்திலே பெரும் புரட்சி உண்டாக்கக் கூடியது. அதை யார் முதலாவது வாங்குகிறார்களோ அவர்களை ஒருவராலும் வெல்ல முடியாது" என்றான் இளைஞன்.

அதிகாரி வியப்புடன் இளைஞனின் கையைப்பிடித்துக் குலுக்கிவிட்டு, உடனே அவனை சேனைபதியிடம் அழைத்துச் சென்று, அவனை அவருக்கு அறிமுகப் படுத்தி வைத்தார்.

சேனைபதி அவனை உட்காரச் சொல்லி விட்டு, மிக்க மரியாதையுடன், "நீர் என்ன கருவி கண்டு பிடித்திருக்கிறீர்?" என்று கேட்டார்.

"நான் ஒரு விமான குருய்ஸர் கண்டு பிடித்திருக்கிறேன். அது ஒரு வாரம் வரை ஆகாசத்திலேயே இருக்கும். ஆயிரம் போர் வீரர்கள் அதில் இருக்க முடியும். காற்றோ மழையோ, வெய்யிலோ பனியோ எதுவாயிருந்தாலும் சரி, அது லட்சியம் செய்யாது. உங்களுக்கு அது வேண்டுமா?"

சேனைபதிக்கு அதை நம்பவே முடியவில்லை. "உண்மையாகவா? அப்படியும் ஒரு கருவி இருக்க முடியுமா??" என்றார் அவர் வாலிபனை நோக்கி.

இளைஞன் உடனே தன் பையில் கையை விட்டுத் துழாவினான். ஒரு பெரிய தஸ்தாவேஜுக் கட்டை எடுத்தான். அதை சேனைபதியிடம் கொடுத்தான். சேனைபதி அவற்றையெல்லாம் படித்துப் பார்த்தார். அவர் முகம் மலர்ந்தது.

"நீர் சொல்வது உண்மையாகவே தோன்றுகிறது. பேஷ்! இதற்கு எவ்வளவு பணம் கேட்கிறீர்?"

"பத்து லட்சம் பவுன்!"

"அப்படியே!" என்று சொல்லி விட்டு பத்து லட்சம் பவுனுக்கு ஒரு செக் எழுதி அதை இளைஞனிடம் கொடுத்தார் சேனைபதி.

இளைஞன் புறப்படுவதற்காக எழுந்தான். சேனைபதி அவனை நோக்கி, "இனிமேல் புதிய கருவி ஏதாவது கண்டு பிடித்தால் அதையும் இங்கே கொண்டு வாருங்கள்" என்றார்.

"உண்மையாகவா?" என்று கேட்டான் இளைஞன்.

"ஆம்,—வேறு ஏதாவது கண்டு பிடித்திருக்கிறீரா?"

"ஓ! கண்டு பிடித்திருக்கிறேன். மிக்க ஆச்சரியமான கருவி!"

"அப்படியா! என்ன அது?" என்று கேட்டார் சேனைபதி.

"அது ஒரு வகையான பீரங்கி. அதன் மூலம், நான் கண்டுபிடித்த மேற்படி விமான குருய்ஸரை ஒரு நொடிக்குள் தான் தூளாக்கி விடலாம்."

"என்ன?" என்று சொல்லி விட்டு மூக்கில் விரலை வைத்து மிகவும் ஆச்சரியப்பட்டார் சேனைபதி.

கிடைப்பதற்குள் விடுமுறை முழுவதுமே தீர்ந்து போய்விடும் போலிருக்கிறதே என்ற கவலை வந்துவிட்டது.

"நமது ஊராக இருந்தால் இந்த லீவுக்கு எத்தனை இடங்களுக்குச் சிட்டாய்ப் பறந்திருப்போம்; என்னென்ன விளையாட்டுக்கள் விளையாடி இருப்போம்" என்றெல்லாம் அவனுக்கு நினைவு மோதி எழுந்தது. ஊரிலுள்ள குளத்தோரத்துக் குட்டை நாவல் மரம், "பாபு! வா வா!" என்று வருந்தி அழைப்பது போலிருந்தது.

அன்று மாமா மத்தியானம் சாப்பிட வரும்போது "என்ன மாமா! இதற்குத்தானா என்னை வரச் சொன்னீர்கள்?" என்று கேட்டே விடுவது என்று முடிவு கட்டினான் பாபு.

அதற்கு அவசியம் ஏற்படவில்லை. மாமா வரும்போதே இரண்டு மூன்று சிறுவர்களைத் தம்முடன் அழைத்துக் கொண்டு வந்தார்.

"பாபு! எனக்கு வர ஒழியாது. இந்தப் பையன்களுடன் புறப்பட்டு 'பார்க் பேரு'க்குப் போ. இன்று ரொம்ப நன்றாக இருக்கும் சைக்கிள் ரேஸ். இப்படியே தினமும் ஒன்றாகப் பார்க்கலாம்" என்று கூறி, வந்த பையன்களைப் பாபுவுக்கு அறிமுகப் படுத்தி வைத்தார் மாமா.

அவர்களில் நாலாவது பாரம் படிக்கும் கோபுவை பாபுவுக்கு ரொம்பப் பிடித்திருந்தது. அவன் சட்டென்று பாபுவின் கையைத் தாவிப் பிடித்து "ஆல் ரைட்! நான் பாபுவை ஜாக்கிரதையாக அழைத்துக் கொண்டு போய்த் திருப்பிக் கொண்டு வந்து விட்டு விடுகிறேன்" என்று குஷியாகச் சொன்னான். அத்துடன் அவன் சட்டைக் காலரை அடிக்கடி தூக்கி விட்டுக் கொண்டு பேசியது பாபுவுக்கு மிகவும் பிடித்திருந்தது.

"சரி மாமா!" என்று சந்தோஷத்துடன் சொன்னான் பாபு. அவனுக்கு இரண்டு ரூபாய் கொடுத்தார் மாமா. பாபுவுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. "வாழ்க, இந்த மாமா!" என்று வாழ்த்தக்கூட நினைத்தான்.

கோபு, தம்பு, ஜம்பு, பாபு எல்லோரும் ஜாம் ஜாம் என்று எக்ஸிபிஷனுக்குக் கிளம்பினார்கள். டிராமில் ஏறிச் சென்று ரிப்பன் கட்டிடத்திற்கு அருகே இறங்கினார்கள்.

## 3. குஸ்தி நடந்தது

**பா**பு பிரமித்தான். அவனுக்கு எதைப் பார்த்தாலும் ஆச்சரியமாக இருந்தது. எங்கு பார்த்தாலும் 'ஜே' 'ஜே' என்று கூட்டம். எவ்வளவோ பேர் வருவதும் போவதுமாக இருந்தார்கள். இவர்களுக்கெல்லாம் வீட்டில் வேறு வேலையே கிடையாதோ என்று நினைத்தான் பாபு. அவன் ஒவ்வொரு வேடிக்கையையும் நின்று நின்று பார்த்தான். கோபு அவசரப் படுத்தா விட்டால் அந்த மூன்றுகால் கோழிக் குஞ்சையே அன்று முழுவதும் பார்த்துக் கொண்டிருக்க அவன் தயார்தான்.

ஐஸ்கிரீம் வாங்கிச் சாப்பிட்டான். அந்த வியாபாரி பாடிய பாட்டை இன்னொருதரம் எப்பொழுது பாடுவான் என்று தம்புவைக் கேட்டுத் தெரிந்து கொண்டான். ஊதிப்பார்த்து நல்ல ஊதலாக ஒன்று வாங்கி டிராயர் பையில் போட்டுக் கொண்டான். பிறகு அங்கிருந்து நடந்தான்.

மாலை மங்கிற்று, மணி ஆறு. இருட்டினவுடன் வீட்டுக்கு வந்துவிட வேண்டும் என்று பாபுவிடம் மாமா சொல்லியிருந்தது நினைவிற்கு வந்தது. "பாபு, பார்த்தது போதுமா? போகலாமா?" என்று கோபு கேட்டான்.

"அதோ, அங்கே கூட்டமாகப் போகிறார்களே, என்ன விசேஷம்?" என்று கேட்டான் பாபு.

"அங்கே குத்துச் சண்டை போடப் போகிறார்கள்" என்றான் ஜம்பு.




"எனக்குக் குத்துச் சண்டை என்றால் ரொம்பப் பிடிக்கும். பார்த்து விட்டுப் போவோமே!" என்று கூறி கோபுவின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான் பாபு.



பொழுது விடிந்தது. பாபு கன குஷியாகப் பட்டணம் வந்து சேர்ந்தான். மாமா தனது பளபளவென்ற மோட்டார் காருடன் எழும்பூர் ரயிலடிக்கு வந்திருந்தார்.

“பலே பாபு, ரொம்பக் கெட்டிக்காரனாக இருக்கிறாயே! தனியாகவா வந்தாய்?” என்று பாபுவின் முதுகைத் தட்டிக் கொடுத்துக் கொண்டே மாமா கேட்டார்.

“ஆமாம் மாமா, டிக்கெட் வாங்கிக் கொண்டு வராவிட்டால் தானே பயம்? நான்தான் அரை டிக்கெட் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறேனே!” என்று பாபு சொன்னவுடன் மாமா ‘களுக்’கென்று சிரித்தார்.

காரில் இருவரும் ஏறிக் கொண்டார்கள். ‘பூம்’ ‘பூம்’ என்று மோட்டார் பல தெருக்களைத் தாண்டித் தாண்டிப் போய்க் கொண்டிருந்தது. மாமாவுக்குப் பக்கத்தில் ‘ஜம்’மென்று உட்கார்ந்து கொண்டு காரில் போவது பாபுவுக்குப் பெருமையாக இருந்தது. இதைப் பார்க்கத் தன் அம்மாவோ, அடுத்த வீட்டு வெங்குட்டுப் பயலோ பக்கத்தில் இல்லையே என்று அவனுக்குக் குறையாகத்தான் இருந்தது.

வீட்டுக்கு வந்து இறங்கியவுடன், “மாமா, அம்மா கவலைப் பட்டுக் கொண்டிருப்பாள்; போய் இறங்கியவுடன் கடிதாசி போடச் சொன்னாள்” என்று பாபு சொன்னான். “பொறுப்புத் தெரிந்த பயல்!” என்று மாமா மறுபடியும் அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தார். மாமி கதவருகில் நின்று மருமானை எட்டிப் பார்த்தாள்.

“எப்போதோ பார்த்தது. அதற்குப் பிறகு பார்க்கவே இல்லை. அப்போது துளியூண்டு பயலாக, சளி வழியும் மூக்கும், கொத்தவரங்காய்ச் சிண்டுமாக இருந்த அந்த பாபுவா நீ?” என்று கேட்பதுபோல் இருந்தது மாமி பார்த்த அந்தப் பார்வை.

இரண்டு தினங்கள் கழிந்தன; பாபுவுக்குப் பொழுது போகவில்லை. மாமா காரில் வருவதும் போவதுமாக இருந்தாரே தவிர, ஊரைச் சுற்றிக் காட்ட அழைத்துக் கொண்டு போகமாட்டார் போலிருந்தது.

பாபு மொட்டை மாடியில் இரண்டு மூன்று தடவை ஏறி ஜாக்கிரதையாக எட்டிப் பார்த்தான். பங்களா காம்பவுண்டுச் சுவரைச் சுற்றிச் சுற்றி வந்தான். ரப்பர் எலியை நிஜப்பூனைக்கு முன்னால் விட்டெறிந்து வேடிக்கை பார்த்தான். ரேடியோவுக்கு அருகே கொஞ்ச நேரம் உட்கார்ந்து பாட்டுக் கேட்டான். பொழுது என்னமோ போகவே இல்லை. நண்பர்களும் பழக்கமாகவில்லை. மாமாவிற்கு ஓய்வு





# பாபு எங்கே?

நவீனன்

## 2. பட்டணப் பிரவேசம்

பாபுவின் நெஞ்சு 'திக்' 'திக்' என்று அடித்துக் கொண்டது. அவன் ஏறக்குறைய நம்பிக்கையை இழந்து விட்டான். இனி ரயிலைப் பிடிப்பது அசாத்தியம் என்று முடிவு செய்து விட்டான்.

"வண்டியைத் திருப்பு. வீட்டுக்குப் போகலாம்" என்றான் அவன் ஜட்கா வண்டிக்காரனைப் பார்த்து.

வண்டிக்காரனுக்கு பாபுவின் மீது எப்படியோ ஒருவகையான அன்பு உண்டாகிவிட்டது. எப்படியாவது அவனை ரயிலில் ஏற்றி விடவேண்டும் என்று அவன் ஆசைப் பட்டான். "கொஞ்சம் பொறு தம்பி!" என்று சொல்லிவிட்டு அவன் குதிரையைத் தட்டிவிட்டான்.

பாபு ஸ்டேஷனையே பார்த்தபடி இருந்தான். ரயில் இன்னும் வரவில்லை. ஏன்? சத்தம் வெகு அருகில் கேட்டதே? புகைகூட வெகு நன்றாகக் கண்ணுக்குத் தெரிந்ததே? பிரயாணிகள் பிளாட்பாரத்தின் மீது ஏகக் கூட்டமாக ரயிலையே ஆவலாக எதிர் பார்த்துக் கொண்டிருப்பதையும் அவன் கண்டான்.

வாயுவேக மனோவேகமாக ஓடி வந்து ஐந்து நிமிஷத்திற்குள் ஜட்கா ஸ்டேஷனை அடைந்தது. பாபு வண்டியை விட்டுக் கீழே இறங்கினான். வண்டிக்காரனுக்கு 'தாங்க்ஸ்' சொல்லி விட்டு பரபரப்பாக மணியைப் பார்த்தான். ஏழு ஆகி ஐந்து நிமிஷமும் கழிந்து விட்டது. ரயில் ஏன் இன்னும் வரவில்லை?

உள்ளே போய் எட்டிப் பார்த்தான். ரயில் தூரத்தில் நின்றபடி 'குப்' 'குப்' என்று புகை விட்டுக் கொண்டிருந்தது.

பாபு அருகில் நின்ற மற்றொரு பிரயாணியிடம், "ஏன் ஸார், ரயில் அங்கேயே நிற்கிறது?" என்று கேட்டான்.

"எருமை மாடு ஒன்று தண்டவாளத்தில் படுத்துக் கொண்டு நகர மறுத்துவிட்டதாம். ஆகையால் ரயில் அங்கேயே நின்று விட்டது" என்று சொன்னார் அவர்.

இதற்குள் ரயில் மெதுவாக நகரத் தொடங்கியது. பாபு கடவுளுக்கு நன்றி செலுத்திவிட்டு விரைந்து போய் டிக்கட் வாங்கிக் கொண்டு வந்து பிளாட்பாரத்தில் தயாராக இருந்தான். அன்று கூட்டமும் அவ்வளவாக இல்லை. ரயில் வந்ததும் வசதியான ஒரு கம்பார்ட்மெண்டைத் தேடிப் பார்த்து ஏறி உட்கார்ந்து கொண்டான்.





சென்னையில் டிசம்பர் 26, 27, 28-ந் தேதிகளில் நடைபெற்ற அகில இந்திய கணித மகா நாட்டின் பொருட்காட்சியில் மதுரை ஜில்லா போர்டாரால் அனுப்பப்பட்ட உசிலம்பட்டி உயர் நிலைப்பள்ளி மாணவர் வரைந்த கணித படங்கள் சிறப்புற்று விளங்கின. அவற்றை வரைந்த முக்கிய மாணவர்களும் மேற்படி பள்ளி கணித ஆசிரியராகிய ஸ்ரீ பரமேஸ்வர ஐயரும் படத்தில் காணப்படுகிறார்கள்.

உபாத்தியாயர் நலன்களைப் பெருக்க இடைவிடாமல் பாடுபட்டு, அவர்களுடைய நம்பிக்கையைப் பெற்றார்.

சமீபத்தில் தமிழில் அவர் ரேடியோவில் பேசக் கேட்டேன். தேசிய பாஷையைப் பற்றிப் பேசினார். அச்சமயம் காந்தியடிகளின் நிர்மாணத் திட்டத்தைப்பற்றி அவர் விளக்கிக் கூறியதைக் கேட்டேன். காந்தியத்தைப் பற்றி ராமய்யருடைய தேர்ந்த ஞானம் எனக்கு வியப்பை அளித்தது.

கல்லூரி பிரின்ஸிபால் என்கிற முறையில் ஸெனட் சபையில் ஸ்தானம் வகிக்கு முன்பு, சர்வகலாசாலைப் பட்டதாரிகளே ஒவ்வொரு தடவையும் ஸ்ரீ ராமய்யரைத் தங்கள் பிரதிநிதியாக செனட்டுக்குத் தேர்தெடுத்து அனுப்பி யிருக்கின்றனர். அது தவிர அகாடமிக் கவுன்ஸிலிலும் சமீபத்தில் ஸிண்டிகேட்டிலும் பதவி வகித்து வருகிறார்.

ஸ்ரீ சாரநாதனுடன் ஆங்கில ஆசிரியராகப் பதவி ஏற்ற ஸ்ரீ ராமய்யர், பல காலம் உதவி பிரின்ஸிபாலாகவும் சேவை செய்தார். ஸ்ரீ சாரநாதன் பிரின்ஸிபால் பதவியிலிருந்து விலகியவுடன் ஸ்ரீ ராமய்யர் பிரின்ஸிபாலானார். இன்று அவருக்கு ஐம்பத்தைந்து வயதாகி விட்டதனால் பிரின்ஸிபால் பதவியிலிருந்து விலகுகிறார்.

ஸ்ரீ ராமய்யருக்குப் பிரிவுபசாரம் நடத்திய மாணவர்களும், நண்பர்களும் அவரை வீட்டில் கொண்டுவந்து விட்டு விட்டுப்போன உருக்கமான காட்சியைக் கண்ட ஒரு நண்பர் ஆச்சரியப்பட்டார். இதில் ஆச்சரியப் படுவதற்கு ஒன்றும் இல்லை. ஸ்ரீ ராமய்யருடன் பழகிய மாணவர்கள் அவருடைய கம்பீரமான தோற்றத்தைக் காணுமலும் அவருடைய போதனையினால் ஏற்படும் ஆதர்சத்தை அடையாமலும் எப்படி இருக்கப் போகின்றனர் என்பதை நினைத்தால் பிரிவுபசாரத்திற்குப் பிறகு ராமருடன் அயோத்தி மக்கள் சென்ற மாதிரி ராமய்யரைத் தொடர்ந்து நண்பர்கள் சென்றதைக் கண்டு ஆச்சரியம் அடையமாட்டோம். ஆனால் முப்பது வருஷங்களாகப் பழகிவந்த இடத்தையும், மாணவர்களையும் பாராமல் ஸ்ரீ ராமய்யர் எப்படி நிம்மதியா யிருப்பார் என்பது யோசிப்பதற்குரிய விஷயம்தான்.

கல்லூரிகள் எவ்வளவோ இருக்கின்றன. ஆசிரியர்களும் ஆயிரமாயிரம் பேர் இருக்கின்றனர். ஆனால் திருச்சி தேசியக் கல்லூரி மாதிரி இன்னொரு கல்லூரியைக் காண்பதரிது. ஸ்ரீ ராமய்யர் மாதிரி லட்சியப் பேராசிரியர் மற்றொருவரைக் காண முடியாது. தேசியக் கல்லூரி வாழ்க! ஸ்ரீ ராமய்யர் வாழ்க!

# பிரின்ஸிபால் ஏ. ராமய்யர்

ரா. நா.

ஒரு பொதுநல ஸ்தாபனத்தைத் தொடங்குவது கஷ்டம். அதைவிடக் கஷ்டமானது அந்த ஸ்தாபனத்தை ஒழுங்காக நடத்தும் நிர்வாகிகளைக் கண்டு பிடிப்பது. திருச்சி தேசியக் கல்லூரி இவ்விரு விஷயங்களிலும் அதிர்ஷ்டம் வாய்ந்தது. ஸ்தாபனத்தை ஆரம்பிக்க ஸர் டி. தேசிகாச்சாரியார் போன்ற பிரமுகர்கள் ஏற்பட்டனர். அதேமாதிரி கல்லூரியின் முதல் பிரின்ஸிபாலாக அமைந்தார் கல்வி உலகில் புகழ் பெற்ற காலஞ்சென்ற ஸ்ரீ கே. ராமானுஜாசாரியார்.

ஸ்ரீ ஆசாரியார் பதவி ஏற்கையிலேயே அவருக்கு வயது அதிகம். தாம் நீடித்து சேவை செய்ய முடியாது என்பதை அறிந்து தமக்கு அப்புறம் ஸ்தாபனத்தைச் சிறப்பாக நடத்தக் கூடியவர்களையும் கண்டு பிடித்தார். ஸ்ரீ ராமானுஜாசாரியாரால் கண்டு பிடிக்கப்பட்ட இரு ரத்தினங்கள்தான் காலஞ் சென்ற பேராசிரியர் சாரநாதனும், அவருடைய ஸகாவாகவும் ஸகோதரர்போலவும் தொண்டுபுரிந்த ஸ்ரீ ஏ. ராமய்யரும்.

சாரநாதனும் ராமய்யரும் ராம லட்சுமணர்கள் போல் இணை பிரியாத் தோழர்கள். இவ்விருவரும் சில விஷயங்களில் மாறுபட்ட குணம் படைத்தவர்கள். எனினும் இந்த மாறுபாடே தேசியக் கல்லூரியின் வளர்ச்சிக்குப் பேருதவியா யிருந்தது என்று கூறலாம்.

ஸ்ரீ சாரநாதன் பிரம்மசாரி. கல்விதான் அவருடைய ஒரே காதலி. அதன் சேவைக்கே ஆயுள் பூராவும் உழைத்தார். ராமய்யர் இல் வாழ்க்கையை சாஸ்திரிய முறையில் நடத்துபவர். எனினும் வாணியின் பூஜையில் பரிபூரணமாக உள்ளத்தை ஈடுபடுத்தியவர்.

ஸ்ரீ சாரநாதன் சில சமயம் பதட்டப்படுவது உண்டு. ஆனால் ஸ்ரீ ராமய்யர் சாத்விக புருஷர்; மிருதுபாஷி. அரசியல் கொந்தளிப்பின் எதிரொலி கல்லூரியில் கேட்கையில் ஸ்ரீ சாரநாதன் கட்டுப்பாட்டை நிலை நாட்டத் துடி துடிப்பார். ஸ்ரீ ராமய்யர் தமது இயல்பான சாந்த ஸ்வபாவத்தாலும் இன்மொழிகளாலும் மாணவர்களை வரம்பு மீறிச் செல்லாமல் திருப்பி விடுவார்.

தேசியக் கல்லூரி மாணவர்களுக்கு அரசியல் விஷயங்களை விவாதிக்கச் சந்தர்ப்பமளித்ததன் மூலம், அவர்களுடைய உற்சாகம் தீவிர வழிகளில் சென்று கட்டுப்பாட்டிற்கு பங்கம் விளைவிக்காமல் பாதுகாத்தார் ஸ்ரீ ராமய்யர்.

தூய கதர் ஆடை, என்றும் மாறாப் புன் முறுவல், இனிய சம்பாஷணை, நண்பர்களிடம் விசுவாசம், கம்பீரமான நடை- இவைதான் ராமய்யர்.

பாடங்களைக் குறிப்பெழுதி அதை வகுப்பில் வந்து படித்து விட்டுக் காலத்தை ஓட்டும் நவீன ஆசிரிய வர்க்கத்தைச் சேர்ந்தவர் அல்லர் ராமய்யர். இலக்கியப் பண்பு பெற்றவர். இலக்கியங்களின் ஜீவனை அறிந்தவர். தாம் அறிந்து அநுபவித்ததை அப்படியே மாணவர்கள் உணரும்படி, அவர்களுக்கு ருசி ஏற்படும்படி கற்பிக்கும் திறமையும் ஆற்றலும் படைத்தவர் ராமய்யர்.

மலையாளத்தில் பிறந்தவர்; எனினும் தமிழ் இலக்கியத்தில் பாண்டித்யம் பெற்றவர். ஸமஸ்கிருதத்தில் தேர்ந்த ஞானமுடையவர். ஹிந்தியில் மகா பண்டிதர்.

திருச்சியில் சில காலம் ஏப்ரல் கிளப் என்று ஒரு சங்கம் நடந்தது. அங்கே மாதம் இருமுறை பல முக்கியமான பிரச்னைகளைப் பற்றி விவாதம் நடக்கும். ஒரு சமயம் ஹிந்தியின் அவசியத்தைப் பற்றிசர்ச்சைநடந்தது. ஸ்ரீ கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் ஹிந்தி அவ்வளவு அவசியம் இல்லை என்று பேசினார். பலர் காரசாரமாகப் பேசினார்கள். கடைசியில் ஸ்ரீ ராமய்யர் அமைதியாகத் தமது கருத்துக்களைக் கூறினார். திசை தப்பிப் போன விவாதம் திருப்திகரமாக முடிந்தது.



மாணவர்கள், உபாத்தியாயர்கள் இரு தரத்தாரின் நல்ல அபிப்பிராயத்தையும் நம்பிக்கையையும் ஒருங்கே பெற்றவர் ஸ்ரீ ராமய்யர்.

ஸ்நானம் செய்து விட்டு வந்து விடுகிறேன்'' என்று சொல்லிப் போனார்.

தேவகி தன் குழந்தைகளை ஒவ்வொருவராய்க் கூப்பிட்டு, "இதோ உங்கள் சித்தியா வந்திருக்கிறார். நமஸ்காரம் பண்ணு!'' என்றாள். (வைஷ்ணவர்கள் சித்தப்பாவைச் 'சித்தியா' என்று சொல்வது வழக்கம்.) "இவர் எங்கள் சித்தியாவா? இத்தனை நாள் எங்களை ஏன் வந்து இவர் பார்க்கவில்லை?'' என்றது ஒரு குழந்தை. அதற்கு, "இப்போதுதான் உங்கள் சித்தியாவுக்குத் தயவு வந்திருக்கிறது. அதற்கு நான் என்ன செய்கிறது?'' என்றாள் தேவகி. இதற்குப் பதில் சொல்லவே எனக்குத் தெரியவில்லை.

குழந்தைகள் நமஸ்காரம் செய்துவிட்டு அவரவர்களும் கையில் ஒரு புஸ்தகத்தை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்.

"அந்த நாளில் நீ படிப்பிலே கெட்டிக்காரியாக இருந்தது போலவே உன் குழந்தைகளும் இருக்கிறார்கள்'' என்றேன் நான்.

"போதும், போதும். நான் படித்த இலட்சணத்தை நீங்கள்தான் மெச்ச வேண்டும். எஸ். எஸ். எல். சி. பரீட்சைக்கே போகாமல் படிப்பை நிறுத்தி விட்டேன். ஆனால் அது உங்களுக்கு எப்படித் தெரியும்? நீங்கள்தான் திடீரென்று ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல், 'சர்டிபிகேட்' கூட வாங்கிக் கொள்ளாமல், மாயமாய்ப் போய் விட்டீர்களே?'' என்றாள்.

இவ்வளவு சீக்கிரத்தில் அந்த விஷயத்தைப் பற்றிப் பேச எனக்கு இஷ்டமில்லை. கடைசியில் தேவகியிடம் விடை பெற்றுக்கொண்டு போகும்போது அந்த 'போர்ஜரி' கடிதத்தின் உண்மை வெளியாயிற்றா என்று கேட்க நினைத்தேன். ஆரம்பத்திலேயே அதைப் பற்றிக் கேட்டுப் பேச்சை விரஸமாக்குவானேன்?

ஆகையால், பேச்சை வேறு பக்கம் திருப்ப விரும்பி, "தேவகி! உன் தாயார் காலமாகி விட்டாளாமே? இப்போதுதான் ஹெட்மாஸ்டர் சொன்னார்!'' என்றேன்.

உடனே தேவகி கடல் மடை திறந்ததுபோல் தன் தாயாரைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். அன்னையின் அருமை பெருமைகளைப் பற்றியும் அற்புத குணங்களைப் பற்றியும் வர்ணித்துக் கொண்டேயிருந்தாள். எனக்கும் மாமியைப் பற்றிக் கேட்கப் பிரியமாயிருந்தது. ஆனால் அதைப் பற்றியெல்லாம் இங்கே சொல்லிக் கதையை வளர்த்த நான் விரும்பவில்லை. மேலே விஷயத்துக்குப் போகிறேன்.

திடீரென்று தேவகி, "அம்மாவைப் பற்றிப் பேச ஆரம்பித்தால் எனக்கு நேரம் போவதே தெரிவதில்லை. இனிமேல்தான் அடுப்பு மூட்டித் தளிகை செய்தாக வேண்டும். நான் போகட்டுமா? அப்பா சீக்கிரம் வந்து விடுவார்!'' என்றாள்.

"எனக்கும் போகவேண்டியதுதான். நேரமாயிற்று. ஆனால் உன் புருஷனைப் பற்றி நீ ஒன்றும் சொல்லவில்லையே, தேவகி! அவரைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம் என்றுதான் நான் முக்கியமாக வந்தேன். அவர் வீட்டில் இப்போது இல்லையா? ஒரு வேளை ஊரிலேயே இல்லையா?'' என்று கேட்டேன்.

தேவகி அந்தப் பழைய நாட்களில் சில சமயம் திடீரென்று சிந்தனையில் ஆழ்ந்து பேசாமலிருப்பாள் என்று சொன்னேன் அல்லவா? அந்தமாதிரி இப்போதும் இருந்தாள். திடீரென்று அவளுடைய பிராயத்தில் இருபது வயது குறைந்து பழைய கன்னிப் பெண் தேவகியாக மாறிவிட்டதாகவே தோன்றியது. யோசனையில் ஆழ்ந்திருந்த அந்த நிமிஷத்தில் அவளுடைய முகபாவம் அப்படியிருந்தது.

"தேவகி! இருபத்தைந்து வருஷத்தில் நீ கொஞ்சம்கூட மாறவில்லை'' என்று நான் சொன்னதும், அவள் திடுக்கிட்டுப் பகற் கனவிலிருந்து விழித்துக் கொண்டவளாய், "என்ன கேட்டீர்கள்?'' என்றாள்.

"உன்னுடைய புருஷரைப் பற்றித்தான் கேட்டேன். அவரைப் பார்க்க முடியாதா?'' என்றேன்.

தேவகி சிறிது நேரம் உச்சிமோட்டைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, "ஆம், அவரைப் பார்க்க முடியாது. அது பெரிய கதை. இப்போதே சொல்ல வேண்டுமா?'' என்றாள்.

(தொடரும்)

அப்படித் திருடிப் பரீட்சைப் பேப்பர் முழுதும் தெரிந்திருந்தாலும், பரீட்சையிலே சரியாகப் பதில் எழுதி மார்க் வாங்க முடிகிறதில்லை! இந்தக் காலத்து மாணுக்கர்கள் ரொம்ப ரொம்ப மட்டமானவர்கள். அடாடா! நீங்கள் எல்லாம் படித்தபோது எவ்வளவு நன்ருயிருந்தது? அப்போது வகுப்புகளுக்கு வருவதே ஒரு சந்தோஷம்!''

"எனக்குக் கூட அந்த நாட்களை நினைத்துப் பார்த்தால் எவ்வளவோ சந்தோஷமாயிருக்கிறது, ஸார்! உங்களிடம் படித்த பிறகு வேறு யாரிடமும் படிக்க நான் இஷ்டப்படவில்லை.''

"ஆமாம், ஆமாம்! நீ டிரான்ஸ்பர் சர்டிபிகேட் வாங்கிக் கொள்ளக்கூட வரவில்லை பாவம்! உன்னை விணுகை...''

"அதனால் என்ன, ஸார்! ஒன்றும் குறைவில்லை. அப்படியே படிப்பை விட்டு விட்டுப் போய் 'பிஸினஸ்' துறையில் சேர்ந்ததினுலேதான் இன்றைக்கு நான் நன்ருயிருக்கிறேன். என்னுடைய ஆபீஸில் எனக்குக் கீழே முப்பது 'கிராஜுவேட்'டுகள் குமாஸ்தா வேலை பார்க்கிருர்கள், ஸார்!''

"ரொம்ப சந்தோஷம். நான் ஆதியிலிருந்து என் கீழ் படித்த மாணுக்கர்களுக்கெல்லாம் இதைத்தான் சொல்லிக் கொண்டிருந்தேன். 'உத்தியோகம் உத்தியோகம் என்று ஆலாய்ப் பறக்காதீர்கள்! ஏதாவது வியாபாரம், கைத்தொழில், பாங்கிங், — இப்படிப் பார்த்துப் புகுந்து கொள்ளுங்கள்' என்று படித்துப் படித்துச் சொல்வேன். நீ ஒருவனுவது என்னுடைய வார்த்தையை மதித்து நடந்து இந்த மாதிரி நல்ல நிலைமைக்கு வந்திருக்கிருயே, அதைப் பற்றி எனக்கு எவ்வளவோ சந்தோஷமா யிருக்கிறது. ஆனுல், பாவம், உன் மாமிதான் கண்ணை மூடி விட்டாள். என்னைப் பரிதவிக்க விட்டுப் போய்விட்டாள். இன்றைய தினம் அவள் உயிரோடிருந்து நீ 'ஜம்' என்று 'ஸ்டுடிபேக்கர்' காரில் வந்து இறங்கியதைப் பார்த்திருந்தால் அப்படியே பூரித்துப் போயிருப்பாள். அவளுக்கு உன் பேரில் அலாதியான பிரியம். எத்தனையோ மாணுக்கர்கள் என்னிடம் படித்திருக்கிருர்கள். அவளிடமும் பக்தியுடன் பழகி யிருக்கிருர்கள். ஆனுல் உன்னிடம் அவளுக்கு ஏற்பட்ட பாசத்தைப் போல்

டாங்கோரையில் புதுக் குடித்தனம் போட்ட போது நீ செய்த உதவிகளைப் பற்றி அவள் சொல்லாத நாள் கிடையாது. என்னிடம்கூட அவளுக்கு ரொம்பக் கோபம். உன் பேரில் நான் அநியாயமாய்ப் பழி போட்டுத் துரத்தி விட்டேன் என்று. ஆனுல் அந்த நிலைமையில் நான் என்ன செய்திருக்க முடியும், கிச்சா! நீயே சொல்லு!''

"ஆமாம், ஸார்! நீங்கள் என்ன செய்திருக்க முடியும்?'' என்றேன் நான். ரங்கநாயகி அம்மாள் காலமாகி விட்டாள் என்னும் செய்தி என்னைத் துயரத்தில் ஆழ்த்தி விட்டது. மாமி கடைசிவரை என்னை நினைவு வைத்துக் கொண்டிருந்தாள் என்பது என் மனதை உருக்கி விட்டது.

இதே சமயத்தில் வாசலில் கலகலவென்று பேச்சுக் குரல் கேட்டது. அடுத்த நிமிஷம் தேவகி தன்னுடைய மூத்த குழந்தைகள் இருவருடனும் வீட்டுக்குள்ளே வந்தாள்.

என்னைப் பார்த்ததும், "ஓகோ! கிட்டாவா? வாசலில் நிற்கும் மோட்டார் கார் உங்களுடையதுதானு? யாருடையதோ என்று பார்த்தேன். நீங்கள் இன்றைக்கு வருகிறதாகச் சொன்னதையே மறந்து போய் விட்டேன். நல்லவேளை! ஆண்டு நிறைவு நடந்த வீட்டில் சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும் என்று வற்புறுத்தியும் தட்டிக் கழித்து விட்டு வந்தேனே? அதுவே நல்லதாய்ப் போயிற்று!'' என்ருள்.

ஸ்திரீகளின் சபல சித்தத்தைப் பற்றி என்ன வென்று சொல்வது? இன்றைக்கு என்னை அவள்தான் வரும்படி சொன்னுள். ஆனுல் நானே வருகிறேன் என்று சொன்னதாக இப்போது சொல்கிருள். அதுமட்டுமல்லாமல், என்னை வரச் சொல்லி விட்டு, அதை அடியோடு மறந்தும் போய் விட்டாள்! நானே மூன்று நாளு நாளாய்க் கனவிலேகூட அதே நினைவா யிருந்தேன். நன்ருயிருக்கிறதல்லவா, கதை?

## 10

தேவகி உள்ளே வந்து உட்கார்ந்ததும் ஹெட்மாஸ்டர் "பார்த்தாயா, தேவகி? நம்ம தண்டாங்கோரை கிச்சாமி எப்படி ஜோராய் 'ஸ்டுடிபேகர்' கார் வைத்துக் கொண்டு இருக்கிறன், பார்த்தாயா? சற்றே நீ இவ

தோன்றியது. முகத்தைப் பார்த்தால் நிச்சயமாய்ச் சொல்லி விடலாம்.

ஆயினும் தலைகீழாக நின்று கொண்டிருக்கிறவரிடம் எப்படிப் பேசுவது? ஜன்னல் ஓரமாகவே நின்று காத்துக் கொண்டிருந்தேன்.

ஒரு நிமிஷத்துக் கெல்லாம் அந்த மனிதரின் கால்கள் கீழே வந்தன. அவர் எழுந்து நின்றார். அறைக்குள் மங்கலான வெளிச்சமே யிருந்தபோதிலும் அவர் பத்மநாப ஐயங்கார்தான் என்பது தெரிந்து விட்டது.

இதுதான் சமயம் என்று "ஸார்! ஸார்!" என்றேன்.

ஐயங்கார் என் பக்கம் சட்டென்று திரும்பிப் பார்த்துக் கடுகடுப்பான முகத்துடன் "யார் அது, சுத்த நியூஸென்ஸ்! இந்த வீட்டில் ஒரு நிமிஷமாவது 'பிரைவஸி' என்பதே கிடையாது!" என்றார்.

"மன்னிக்க வேண்டும் ஸார்! நான்தான் உங்கள் பழைய மாணாக்கன் கிச்சாமி! என்னை ஞாபகம் இல்லையா?" என்றேன்.

உடனே ஹெட்மாஸ்டரின் முகம் மலர்ந்தது. "அடே டேடேடே! நம்ம தண்டாங்கோரை கிச்சாமியா? வா! வா! தேவகி கூடச் சொன்னாள், நீ வருவாய் என்று. நான்தான் மறந்து விட்டேன். வா! உள்ளே வா!" என்று சொல்லிக் கொண்டே வந்து அறையின் கதவைத் திறந்தார். உள்ளே போனதும் தானும் உட்கார்ந்து என்னையும் ஒரு நாற்காலியில் உட்காரச் சொன்னார்.

மூக்குக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு என்னை நன்றாய் உற்றுப் பார்த்து விட்டு, "ஆமாம், நீ கிச்சாமி தான்! ஆனால் எப்படி மாறிப் போயிருக்கிறாய்? ஷர்ட்டு, கோட்டு, கையிலே ரிஸ்ட்வாச்சு, பையிலே பார்க்கர் பேனா எல்லாம் பிரமாதமா யிருக்கிறதே; வாசலிலே நிற்கிற கார் கூட உன்னுடையதுதானாக்கும்! ஜோரான ஸ்டூடிபேக்கர் கார் அல்லவா? தேவகி சொன்னது சரிதான். நல்ல பணம் சம்பாதிச்சுட்டே போலிருக்கிறது. எல்லாம் பெருமாளுடைய அருள். ரொம்ப சந்தோஷம். ஆனாலும் எப்படி மாறிப் போயிருக்கிறாய்? என்னுடைய 'ஸ்டூடண்ட்' கிச்சாமி நீதான் என்று நம்புவதே கஷ்டமாய்த்தா னிருக்கிறது. எப்படியாவது க்ஷேமமாயிருந்தால் சரி. இப்போது எங்கே இருக்கே? என்ன செய்யறே? எல்லாம் சவிஸ்தாரமாய்ச் சொல்லு பார்க்கலாம்!" என்றார்.

"பிஸினஸ் செய்து கொண்டிருக்கிறேன், ஸார்! ஏதோ உங்கள் ஆசீர்வாதத்தினாலே இது வரை எல்லாம் சௌக்கியமாகவே இருந்து வருகிறது. தியாகராஜ நகரிலே வசித்து வருகிறேன். தாங்கள் இங்கே வந்து ரொம்ப வருஷம் ஆகிவிட்டதோ?"

"ஏன்? ரிடையர் ஆனதிலிருந்து இங்கேதான் இருந்து வருகிறேன். வேறு எங்கே போகிறது? இது என் பிதுரார்ஜித வீடு."

"அப்படியா? ரொம்ப சந்தோஷம்! உங்களை நான் பார்த்துக் கிட்டத்தட்ட இருபத்தைந்து வருஷம் இருக்குமே? ஆனால் உங்களுடைய தோற்றத்தில் மட்டும் மாறுதலே இல்லை. அன்று மாதிரியே இன்றைக்கும் இருக்கிறீர்கள், ஸார்!"

"நீ சொல்கிறது உண்மை. வயது எனக்கு இப்போது 75 ஆகிறது. ஆனால் நான் இதைச் சொன்னால் ஒருவரும் நம்புகிறதில்லை. எல்லாரும் அறுபது வயதுதான் மதிப்பிடுகிறார்கள். எதனாலே இப்படி இருக்கேன் தெரியுமா! எல்லாம் யோகாசனத்தின் மகிமைதான். நீ வருகிற போதுகூட ஆஸனந்தான் செய்து கொண்டிருந்தேன். நீ வேணுமானால் பாரு! நான் நூறு வயது இருக்கப் போகிறேன். வியாதி வெக்கை நோய் நொக்காடு எதுவும் இல்லாமல் இருக்கப் போகிறேன். நான் சுரம் தலைவலி என்று படுத்து இன்றைக்கு வருஷம் பதினைந்து ஆகப்போகிறது."

"எந்த வருஷத்திலே, ஸார், நீங்கள் ரிடையர் ஆனீர்கள்? ரிடையர் ஆனவரையில் தண்டாங்கோரையில்தான் ஹெட் மாஸ்டரா யிருந்தீர்களா!"

"ஆமாம், கிட்டா, ஆமாம்! வேறு எங்கே நான் போகிறது? தண்டாங்கோரையிலே அந்த நாட்களை நினைத்தாலே எனக்குச் சந்தோஷமா யிருக்கிறது. அதுவும் நீங்கள் எல்லாம் படித்துக் கொண்டிருந்த போது, எப்பேர்ப்பட்ட நல்ல ஸெட்? நீங்கள் எவ்வளவு சிரத்தையாய்ப் படித்தீர்கள்! உபாத்தியாயர்களிடம் எவ்வளவு மரியாதையா யிருந்தீர்கள்!—இந்தக் காலத்துப் பிள்ளைகள் அடியோடு கெட்டுப்போய் விட்டார்கள்! படிக்கிறதில்லை; பரீட்சைப் பேப்பரைத் திருடப்பார்க்கிறது;

யான ரங்கநாயகி அம்மாளும் உயி ரோடு செளக்யமா யிருக்கிறார்களா? அதைக்கூடத் தேவகியிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் போய்விட் டேனே? என்றாலும், பாதகமில்லை; எல்லாம் வருகிற ஞாயிற்றுக் கிழமை காலையில் தெரிந்து போகிறது!

9

ஞாயிற்றுக் கிழமை பொழுது விடிந்தது. காலையில் நான் விழித்து எழுந்ததும் என் மனதில் உண்டான முதல் நினைவு, அன்றைக்குத் தேவகி யின் வீட்டுக்குப் போகவேண்டும் என்பதுதான்.

பொழுது விடிந்தவுடனேயே, காரை எடுத்துக் கொண்டு தேவகியின் வீட் டுக்குப் போக வேண்டும் என்று தோன்றியது. அந்த எண்ணத்தைப் பலவந்தமாகக் கட்டுப் படுத்திக் கொண்டேன். அவ்வளவு சீக்கிரமா கப் போனால், யாராவது சிரிப்பார்கள். மேலும் அப்போது பனிகாலம். காலை ஏழு மணி வரையில் மூடுபனி கொட் டிக் கொண்டிருந்தது. சில வீடுகளில் அதற்குள் எழுந்திருக்கக் கூட மாட் டார்கள். அதிலும் ஞாயிற்றுக் கிழமை களில் நிச்சயமாக நேரங்கழித்தே எழுந்திருப்பார்கள். காலை எட்டு மணி வரையில் பனியின் சிலு சிலுப்பு இருந்தது. பொழுது விடிந்து எழுந் திருந்து காலைக் கடன்களை முடித்துக் காப்பி சாப்பிட அவகாசம் கொடுக்க வேண்டுமல்லவா?

கடைசியாக, எட்டரை மணிக் குப் புறப்பட்டேன். தேவகி கொடுத் திருந்த விலாசம் சிந்தாதிரிப் பேட்டை யில் ஒரு சந்து. அந்தச் சந்தைக் கண்டு பிடித்து, வீட்டு நம்பரையும் கண்டு பிடிப்பதற்குள், மணி ஒன்பது ஆகி விட்டது. ஆனால் நான் எண்ணியது போல் வீடு அவ்வளவு மோசமாயில்லை. அது ஒரு மச்சு வீடு. கீழ்க் கட்டிலும் மேன் மாடியிலும் பல அறைகள் உள்ள விசாலமான வீடு.

காரைக் கொண்டு போய் நிறுத்திய தும் யாராவது வீட்டுக்குள்ளிருந்து வந்து விசாரிப்பார்கள் என்று நினைத் தேன். யாரும் வெளியே வருகிற வழி யாக இல்லை. வீட்டு வாசலில் படிக் கட்டில் நின்று, "ஸார்! ஸார்!" என் றேன். கீழ்க்கட்டிலிருந்து பதில் ஒன் றும் வரவில்லை. மேலே யிருந்து, ஒரு கடுமையான புருஷக் குரல், "யார் அங்கே?" என்று சத்த மிட் டது. ஒரு விநாடி "இது என்ன வம்பு? ஒரு வேளை விலாசம் சரியா கத் தெரிந்து கொள்ளாமல் வேறு யார் வீட்டுக்காவது வந்து விட் டோமோ?" என்று நினைத்தேன்.

வாசற் படிக்கட்டிலிருந்து வீதியில் இறங்கி அண்ணாந்து பார்த்தேன். மேல் மாடி அறையின் ஜன்னல் கதவை யாரோ படீர் என்று சாத்தினார்கள்.

மேல் கட்டில் வேறு யாராவது குடி யிருக்கலாம் என்று எண்ணிக்கொண்டு மறுபடியும் வாசற்படி ஏறிக் கத வண்டையில் வந்து "ஸார்! ஸார்!" என்றேன். அதற்கும் பதில் இல்லா மற் போகவே, தைரியத்தைக் கையில் பிடித்துக் கொண்டு, கதவை இரண்டு தடவை தட்டி "தேவகி! தேவகி!" என்றேன். பிறகு, பாதி சாத்தி யிருந்த கதவைத் திறந்தேன்.

உள்ளே முற்றத்தில் கொட்டிக் கொண்டிருந்த தண்ணீர்க் குழா யண்டை ஒரு வேலைக்காரி பாத்திரம் துலக்கிக் கொண்டிருந்தாள். ஒரு குழந்தை குழாயண்டை நின்று குழாயி லிருந்த தண்ணீரில் கையை வைத்து விசிறி அடித்துக் கொண்டிருந்தது.

அந்தக் குழந்தையைப் பார்த்ததும் என் மனம் நிம்மதி யடைந்தது. அந்தக் குழந்தை பொருட் காட்சி மைதானத் தில் தேவகியுடன் நான் பார்த்த குழந் தைதான். ஆகவே, இது தேவகியின் வீடு என்பதில் சந்தேகமில்லை. ஒரு வேளை உள்ளே சமையற்கட்டில் தேவகி இருக்கலாம். குழாயிலிருந்து தண்ணீர் கொட்டிக் கொண்டே யிருப் பதால் நான் மெதுவாய்க் கூப்பிட்டது காதில் விழவில்லை போலும்.

என்னுடைய இரண்டு கையையும் பலமாகத் தட்டவே வேலைக்காரி நிமிர்ந்து என்னைப் பார்த்தாள். கையை அலம்பிவிட்டு ஏதோ முணு முணுத் துக் கொண்டே என் அருகில் வந்தாள். "என்னாங்க, சாமி!" என்றாள்.

"தேவகி அம்மாளைப் பார்ப்பதற் காக வந்தேன். அந்த அம்மாளின் வீடு இதுதானே?" என்றேன்.

"அம்மா அடுத்த வீதிக்குப் போயி ருக்காங்க. ஒரு சிநேகிதி அம்மாளின்

குழந்தைக்கு ஆண்டு நிறைவுக் கலியாணம். அதற்காகப் போயிருக்காங்க!'' என்றாள் வேலைக்காரி.

"எப்போது திரும்பி வருவார்கள்?''

"தெரியாதுங்க. அனேகமாக இப்பவே வந்தாலும் வந்துடுவாங்க!''

இதென்ன தொந்தரவு என்று நினைத்துக் கொண்டு, "வீட்டிலே வேறு யாருமில்லையா! அந்த அம்மாளின் புருஷர்?......'' என்றேன்.

வேலைக்காரி கொஞ்சம் திகைத்து நின்றுவிட்டு, "அவங்க வெளியூருக்குப் போயிருக்காங்க! இன்னும் திரும்பி வரவில்லைங்க!'' என்றாள்.

அவளுடைய திகைப்பின் காரணம் அப்போது எனக்குப் புரியவில்லை. பிற்பாடு தெரிந்தது.

"தேவகி அம்மாளின் தகப்பனார் பத்மநாப ஐயங்கார் இருக்காரா?'' என்று கேட்டேன்.

"அவரு இருக்காரு! அதோ அந்தக் காமரா அறையிலே எட்டிப்பாருங்க!'' என்று சொல்லிவிட்டு வேலைக்காரி தன்னுடைய வேலையைப் பார்ப்பதற்குப் போய் விட்டாள்.

**வே**லைக்காரி சுட்டிக் காட்டிய அறையின் கதவு சாத்தியிருந்தது. சற்று நேரம் உட்கார்ந்திருக்கலாம் என்றால் ஒரு பெஞ்சியோ, நாற்காலியோ ஒன்றும் கிடையாது. மேலும், அந்த வேலைக்காரி காமரா உள்ளுக்குள் எட்டிப் பார்க்கச் சொன்னதின் அர்த்தம் என்ன?

அந்த அறை ஜன்னலின் கீழ்ப் பாதிக் கதவுகள் சாத்தியிருந்தன. அருகில் சென்று மேற்பகுதி வழியாக எட்டிப் பார்த்தேன். உள்ளே நான் பார்த்த காட்சி ஒரு நிமிஷம் என்னைப் பிரமிக்கும்படி செய்து விட்டது.

ஒரு வயதான மனிதர் அந்த அறையின் சுவர் ஓரமாகத் தலைகீழாக நின்று கொண்டிருந்தார். அவருடைய தலையை ஒரு தலையணையில் வைத்துக் கொண்டிருந்தார். கால்களைச் சுவர் மீது சாத்தியிருந்தார். மிகவும் சங்கடப்பட்டுக் கொண்டு நின்றார் என்பது தெளிவாயிருந்தது. ஆனால் அவருடைய முகம் எனக்குத் தெரியவில்லை. எனினும் அவர் ஹெட்மாஸ்டர் பத்மநாப ஐயங்காராக இருக்கலாம் என்று



பரிந்து கூறியது கிணற்றுக்குள்ளிருந்து பேசியதுபோல் என் காதில் விழுந்தது. மாமியின் குரல் கேட்டுக் கொண்டிருக்கும் போதே வீட்டை விட்டு வெளியேறினேன். பிறகு அந்த வீட்டுக்குள் நுழையவே இல்லை.

அன்றிரவே அந்த ஊரை விட்டுக் கிளம்பிவிட்டேன். பள்ளிக்கூடத்தில் 'டிரான்ஸ்பர் சர்டிபிகேட்' வாங்குவதற்காகக் கூடத் தாமதிக்கவில்லை. மறுபடி ஹெட் மாஸ்டர் முகத்தில் விழிக்கவே நான் விரும்பவில்லை. அன்றிரவு கிளம்பியவன்தான்; பிறகு அந்த ஊரின் எல்லையைக்கூட இன்று வரையில் நான் மிதிக்கவில்லை. அன்றைய நிகழ்ச்சி, — அன்று எனக்கு நேர்ந்த அதிர்ச்சி, — என்னுடைய வாழ்க்கையின் போக்கையே மாற்றி அமைக்கக் காரணமாயிருந்தது.

கிராமத்துக்குப் போய் அம்மாவிடம் சொல்லிக்கொண்டு கல்கத்தாவுக்குப் பிரயாணமானேன். கல்கத்தாவில் என்னுடைய தூரத்து உறவினர் ஒருவர் இருந்தார். பெரிய கம்பெனியில் அவர் மானேஜர் உத்தியோகம் பார்த்தார். அவரை அண்டி முதலில் அவருடைய வீட்டில் சமையல் வேலை செய்தேன். பிறகு அவருடைய கம்பெனியில் குமாஸ்தாவானேன். நாளடைவில் பொறுப்புள்ள பெரிய உத்தியோகங்கள் கிடைத்தன. கடைசியில் சென்னையிலேயே மேற்படி கம்பெனியின் கிளை ஆபீஸுக்கு மானேஜரானேன். பணமும் பல வசதிகளும் என்னைத் தேடிக்கொண்டு வந்தன.

பல வருஷ காலம் மணம் செய்து கொள்ளாமலே இருந்தேன். என் முப்பதாவது வயதில் வாழ்க்கையின் தனிமையைப் பொறுக்க முடியாமல் கலியாணம் செய்து கொண்டேன். என்னுடைய இல்வாழ்க்கையைப் பற்றிக் குறை ஒன்றும் சொல்லுவதற்கில்லை. நம் நாட்டில் பெரும்பாலோருடைய இல்வாழ்க்கையைப் போல் என் குடும்ப வாழ்க்கையும் லோகாபிராமமாக நடந்து வருகிறது.

எப்போதாவது சில சமயங்களில், ஹெட்மாஸ்டர் பெண் தேவகியைப் பற்றி நான் நினைத்துக் கொள்வதுண்டு. அவளை மணந்திருந்தால் என்னுடைய வாழ்க்கை எவ்வளவு ஆனந்தமயமாயிருந்திருக்கும் என்று அசட்டுக் கனவுகள் காண்பதுண்டு. அப்பொழுதெல்லாம், கடைசிச் சந்திப்பில் அவள் என்பேரில் சுமத்திய அநியாயப் பழியை நினைந்து அவள் பேரில் வெறுப்பை வேண்டுமென்று வருவித்துக் கொள்வேன். ஆயினும், அது என்ன அதிசயமோ, தெரியவில்லை! எவ்வளவு முயன்றாலும் தேவகியைப் பற்றி வெறுப்பாக என்னால் நினைக்க முடியவில்லை. அவள் எங்கே இருக்கிறாளோ, அவளுடைய வாழ்க்கையின் சுக துக்கங்கள் எப்படியோ,—என்று நினைக்கும்போது ஒரு தனிப்பட்ட அநுதாப உணர்ச்சி ஏற்படும். தேவகியைப் பற்றிய சிந்தனையில் நான் ஆழ்ந்திருக்கும்போது யாராவது ஏதாவது கேட்டால் என் காதிலேயே ஏறாது. சுய ஞாபகம் வந்ததும் "என்ன சொன்னீர்கள்? ஏதோ ஞாபகமாய் இருந்துவிட்டேன்!" என்பேன்.

பொருட் காட்சி மைதானத்தில் தேவகியைத் திடீரென்று பார்த்ததிலிருந்து அவள் விஷயமான அநுதாப உணர்ச்சி ஒன்றுக்கு நூறு மடங்காயிற்று. அவளுடைய தோற்றத்தையும் ஆடை ஆபரணங்களையும் பார்த்தால் அவ்வளவு செழிப்பான நிலையில் அவள் இருக்கக்கூடும் என்று தோன்றவில்லை. குழந்தைகளைப் பார்த்தாலும் அப்படியே தானிருந்தது. பாவம்! என்ன கஷ்டப் படுகிறாளோ, என்னமோ? அவளுக்கு நான் ஏதேனும் உதவி செய்வது சாத்தியமாயிருந்தால், அதைக் காட்டிலும் எனக்கு மகிழ்ச்சி தரக்கூடியது வேறு ஒன்றுமே இராது.

அது மட்டுமல்ல; தேவகியும் அவளுடைய தந்தையும் என் பேரில் கொண்ட சந்தேகம் ஆதாரமற்றது என்பதை எப்படியேனும் நிரூபிக்க வேண்டும். அப்படி என் பேரில் அவர்கள் அநியாயப் பழி சுமத்தியதற்காக வெட்கப்படும்படியும் செய்ய வேண்டும்!—இந்த ஒரு காரியம் நிறைவேறினால் பிறகு என் வாழ்க்கையில் குறைப்படுவதற்கே இடம் ஒன்றுமிராது. அது நிறைவேறுகிற வரையில் என் உள்ளத்தில் குறையும் வேதனையும் இருந்து கொண்டு தானிருக்கும்.

ஹெட்மாஸ்டர் பத்மநாப அய்யங்காரும், அவருடைய உத்தம பத்தினி

காகக்கூடக் கேட்டான். அப்புறம் அன்றைக்கு அந்த நோட் புத்தகத்தைக் காணுமல் நான் தேடியதும், அதைப் பற்றிக் கவலைப்பட்டதும், திடீரென்று மறுநாள் அந்த நோட் புத்தகம் என் அறையில் வந்து முளைத்திருந்ததும் ஞாபகத்துக்கு வந்தன. அந்தக் கணத்தில், குற்றவாளி யார் என்பது என் மனதிற்கு ஐயமற விளங்கி விட்டது. அந்த அயோக்கியன் வைத்தியினுடைய வேலைதான். இதைப்போய் உடனே ஹெட்மாஸ்டரிடம் சொல்லி என்பேரிலுள்ள சந்தேகத்தையும் தப்பெண்ணத்தையும் போக்கிக் கொள்ள வேண்டும். குற்றவாளி யார் என்பது ருசுவாகிவிட்டால், பிறகு நின்றுபோன கலியாணத்தைத் திரும்பவும் பேசி முடித்து நடத்தி வைப்பதுகூடச் சாத்தியமாகலாம் அல்லவா?

இப்படியெல்லாம் ஆகாசக்கோட்டைகளைக் கட்டிக்கொண்டு மறுபடியும் ஹெட்மாஸ்டரின் வீட்டுக்கு விரைந்து சென்றேன். அடடா! அங்கே எனக்கு எவ்வளவு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது?

நான் எவ்வளவோ அன்பும் மதிப்பும் வைத்து என்னுடைய இருதயத்திலே கோயில் கட்டிப் பூசை செய்து வந்த தெய்வமாகிய தேவகி இப்படி என் பேரில் அபாண்டமான பெரும் பழியைப் போடுவாள் என்று நான் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்?

ஆனால் அவள் பேரில் குற்றம் சொல்லுவதிலும் பயனில்லைதான். அவள் என்ன செய்வாள், பாவம்? சந்தர்ப்பங்களின் சேர்க்கை அப்படி அவள் கூட என்பேரில் சந்தேகப்படும்படியாகச் செய்து விட்டது.

நான் ஹெட்மாஸ்டரின் வீட்டுக்குள் புகுந்தபோது தேவகி விசித்து அழும் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. ஹெட்மாஸ்டர் இரையும் சத்தமும் அவருடைய மனைவி தன் பெண்ணுக்குப் பரிந்து ஏதோ சொல்லும் சத்தமும் கூடக் கேட்டது. இந்தச் சமயத்தில் நான் உள்ளே போய் உண்மையை வெளிப்படுத்தித் தேவகியை அவளுடைய தந்தையின் கோபத்திலிருந்து மீட்க வேண்டும் என்ற ஆசையுடன் தடபுடலாகப் பிரவேசம் செய்தேன். ஆசை அதிகமாகிற பொழுது அறிவு மழுங்கிவிடும் என்பது எவ்வளவு உண்மையான வார்த்தை!

நான் உள்ளே சென்றதும் அந்த மூன்று பேரும் பூசை வேளையில் கரடி புகக் கண்டவர்கள் போல் மிரண்டு விழித்து என்னைப் பார்த்தார்கள்.

ஹெட்மாஸ்டர் என்னைப் பார்த்ததும் ஏதோ சொல்ல வாயெடுத்தவர், பேசவே முடியாதவராய், திறந்த வாய் திறந்தபடி நின்றார்.

மாமியோ கண்ணீர் ததும்பிய கண்களோடு என்னைப் பார்த்தாள். 'பாவம்! இந்தச் சமயத்திலா நீ வந்து சேர வேண்டும்?' என்று மாமியின் கண்கள் கருணையோடு கூறின.

தேவகிதான் முதலில் வாயைத் திறந்து பேசினாள். அடடா! எவ்வளவு கர்ண கடூரமான வார்த்தைகள் அவளுடைய வாயிலிருந்து வெளி வந்தன? தேவகியின் குரலைக் குயிலின் குரலோடும் அவளுடைய பேச்சைக் கிளியின் மழலையோடும் ஒப்பிட்டுப் பார்த்து இறுமாந்திருந்த என்னை அவளுடைய கொடுமையான வார்த்தைகள் எப்படிப் புண்படுத்தி வேதனை செய்தன?

"என்னைப் போட்டு ஏன் பிடுங்கி எடுக்கிறீர்கள், அப்பா! உங்கள் அருமைச் சிஷ்யன் கிச்சாமி, இவன்தான் என்னுடைய வியாச நோட் புத்தகத்தை எடுத்துப் போய்ச் சில நாள் வைத்திருந்தான். இந்தத் தடியன்தான் என்னுடைய எழுத்துமாதிரி எழுதி அந்தப் பொய்க் கடிதம் போட்டிருக்க வேண்டும்!" என்றாள் தேவகி.

அவ்வளவுதான்; ஹெட்மாஸ்டர் ரௌத்ராகாரமடைந்து என்னை நோக்கி நடந்து வந்தார். "அடபாவி! சண்டாளா! என்னுடைய குடியைக் கெடுத்துவிட்டு, மறுபடியும் என்ன தைரியமாய் இந்த வீட்டுக்குள்ளே நுழைகிறாயடா!" என்று அலறிக்கொண்டே என்னருகில் வந்து என் கழுத்தைப் பிடித்து வேகமாக ஒரு தள்ளுத் தள்ளினார்.

தள்ளிய வேகத்தில் எதிரிலேயிருந்த சுவரிலே போய் முட்டிக்கொண்டேன். ஒரு நிமிஷம் என் பொறி கலங்கிற்று.

"ஐயையோ! உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா, என்ன? அந்தப் பிள்ளை பேரில் உங்கள் கோபத்தைக் காட்டுகிறீர்களே?" என்று, மாமி




8

**வை**த்தியநாதனும் சுந்தரமும் சேர்ந்து சிரித்த சிரிப்பின் ஒலி என்னை நெருப்பாகத் தகித்தது. அவர்களுடைய சிரிப்பில் இடி விழட்டும் என்று சபித்தேன். என் உள்ளத்தில் அவ்வளவு பெரும் புயலை அவர்கள் உண்டு பண்ணிவிட்டுப் போனார்கள். அவர்கள் கூறியதையெல்லாம் ஒவ்வொன்றாய் எண்ணிப் பார்த்தேன். அவற்றில் எவ்வளவு தூரம் உண்மை இருக்கலாம் என்றும் சிந்தித்தேன். மாப்பிள்ளை விட்டாருக்கு மொட்டைக் கடிதம் போனது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். கலியாணம் தடைப்பட்டதற்கு ஏதேனும் காரணம் இருந்து தீரவேண்டும் அல்லவா?

ஆனால் அந்தக் கடிதம் எழுதியது யாராயிருக்கும்? தேவகியே எழுதினாள் என்பது உண்மையாயிருக்குமா? அதில் என் பெயரைக் குறிப்பிட்டிருந்ததும் நிஜமாயிருக்க முடியுமா?— அதை எண்ணும்போதே எனக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது. ஆனால் கொஞ்சம் நிதானித்து யோசித்து அது உண்மையாயிருக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தேன். என்னைப் பற்றித் தேவகி அப்படி எழுதியிருக்கும் பட்சத்தில் சற்று முன்னால் என்னை அம்மாதிரி வரவேற்றிருக்க மாட்டாள். அவ்வளவு அலட்சியமாகவும் வெறுப்பாகவும் பேசியிருக்க மாட்டாள். என்னிடம் அவள் காதல் கொண்டிருக்கிறாள் என்பது மட்டும் உண்மையாயிருக்கும்பட்சத்தில், ஹெட்மாஸ்டர் காலிலே விழுந்து கெஞ்சிக் கேட்டுக் கொள்ளலாம். தேவகிக்குத் தகுந்த கணவனாவதற்கு நான் பெரும் பிரயத்தனம் செய்வதாக வாக்குறுதி அளிக்கலாம். அவளை நான் மணந்து கொள்வதற்கு அவர் கூறும் எல்லா நிபந்தனைகளையும் ஏற்றுக் கொள்ளலாம்.

ஆனால் அது உண்மையாயிருக்க முடியாது. தேவகி அத்தகைய கடிதம் எழுதியிருக்க முடியாது. பின், யார் எழுதியிருக்கக்கூடும்? ஏன்? இந்த அயோக்கிய சிகாமணி வைத்தியும் சுந்தரமும் செய்தவேலையாக இருக்கலாம். ஒரு பெண்ணின் வாழ்க்கையைக் கெடுத்து என்னையும் அவமானப்படுத்திச் சந்தி சிரிக்கவைப்பதற்கு அவர்கள் இந்தச் சூழ்ச்சி செய்திருக்கலாம்.

சட்டென்று ஒரு விஷயம் எனக்கு ஞாபகம் வந்தது. தேவகி வியாசங்கள் எழுதிய நோட் புத்தகத்தை ஒரு தடவை நான் என் அறைக்கு எடுத்து வந்திருந்தேன். அவளது வியாசம் ஒன்றைத் திருத்திக் கொடுப்பதற்காகத்தான். அதே சமயத்தில் வைத்தியும் என் அறைக்கு வந்திருந்தான். அந்த நோட் புத்தகத்தை எடுத்துப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். ஏதோ அதைப் பற்றிக் 'கிறுதக்'



அட்டைப்பட விளக்கம்

# கருணை காட்டும் கை

பேரண்டம் முழுதும் ஒரே வஸ்துதான் நிறைந்து நிற்கிறது. அந்த வஸ்துவின் உள்ளத்தில் எழுகின்ற உருவங்களே சூரியன், சந்திரன் கோடானு கோடி நக்ஷத்திரங்கள் எல்லாம், என்ற உண்மையைக் கண்டு கொண்டார்கள் நம்முடைய முன்னோர்கள்.




இந்த உண்மையைப் புலப்படுத்துவதற்காக இறைவனது சிரசில் சந்திரனை வைத்தார்கள். அதோடு நாம் காண்கிற மாபெரும் நக்ஷத்திர வட்டத்தைச் சர்ப்பம் என்ற உருவம் கொடுத்து இறைவனது தலையில் சூடினார்கள்; கழுத்தில் ஆபரணமாகச் சுற்றினார்கள்; அரையில் கச்சையாகக் கட்டினார்கள்; கையில் கங்கணமாகவும் அணிவித்தார்கள். எங்கும் நிறைந்த வஸ்துவை ஏதோ அளவிட்டு அலங்கரிப்பதாக எண்ணம்.

உதிக்கிற சூரியனையும் சமுத்திரத்தையும் இறைவனது உருவத்தோடு ஒட்டிப் பார்க்கையில் அவை சாமான்யப் பொருள்களாக ஆகி விடுகின்றன.

இந்த விதமாக இறைவனது பரிபூரண நிலையை அறிந்தவர்கள், 'மனம்' என்ற தத்துவத்துக்குள்ளும் இறங்கிப் பார்த்தார்கள்.

அப்படிப் பார்க்கையில் அறிவு தத்துவம் என்பது குறைந்து குறைந்து ஒன்றுமில்லாது போய்க் கடையில் இறைவனது எங்கும் நிறைந்த ஏக உள்ளத்தில் ஒன்றாய் விடுகிறது.

ஞானிகளுடைய தபசெல்லாம், தங்களுக்கான உள்ளம் என்பதாக ஒன்றும் இல்லை, இறைவன்தான் உள்ளத்தில் நின்று எல்லாவற்றையும் உணருகிறான், என்ற தியானம் தான். அதாவது இறைவனோடு ஒன்றென்று நாம் உணருவதே தவத்தின் லக்ஷ்யம்.

ஞானிகளின் இந்தத் தபசை இமயபருவத ராஜனது புத்திரியாக உருவகப்படுத்தி, இறைவனோடு ஒன்றாகக் கலப்பதற்கு உமை தவம் செய்தாள் என்று அழகாகக் கற்பனை செய்தார்கள். அத்தகைய தவத்தை அங்கீகரிக்கிறான் இறைவன் என்பதையும் கருணை காட்டும் கையின் மூலமாய்ச் சித்திரித்தார்கள்.

அட்டைப் படத்தில் சிவபெருமானது அமைதியான ஆனந்தத்தை மூன்று கண்களுமே காட்டுகின்றன. அவனுடைய எங்கும் நிறைந்த ஆட்டத்தை அதாவது செயலைப் பாவிக்கும் சடை காட்டுகிறது. கை அங்கீகாரத்தையும் அருளையும் காட்டுகிறது. சந்திரன், சர்ப்பம், சமுத்திரம், சூரியன் எல்லாம் இறைவனது சர்வ வியாபகத்தை காட்டுகின்றன.

பார்வதிதேவியின் தவக்கோலம் இறைவனோடு ஒன்றாய்விட வேண்டும் என்ற ஞானிகளுடைய லக்ஷ்யத்தைக் காட்டுகிறது.

இத்தனை விஷயங்களையும் மனதில் வைத்து அனுபவித்து நம்மவர்கள் பாடுகிறார்கள்.

அகந்தா (நு) அணு அணுவாய்,
அண்டமெல்லாம் தானாய்,
மகத்தாகி, நின்றனை நீ
வாழி பராபரமே!

மைகாட்டும் மாயை
மயக்கம் அற, நீ குருவாய்க்
கைகாட்ட வும்கனவு
கண்டேன் பராபரமே!

—தாயுமானவர்.

மனசுக்குள்ளும் இறைவன்தான் இருக்கிறான். நாம் பார்க்கிற வானத்திலும் அவனே இருக்கிறான். அதற்குமேல் இறுதியில்லாத பரிபூரணமாயும் இருக்கிறான் இறைவன்.

ஆணவத்தால் ஒரே இருள் பிழம்பில் இருக்கிறோம் நாம். அந்த மாயையாகிய மயக்கத்தை நீக்குவதற்கும் அவனே காரணமாய் இருக்கிறான்.

உலகத்தில் இறைவனைத் தவிர்த்து வேறொன்றும் இல்லைதானே?

" ...நீ குருவாய்க்
கைகாட்ட வும்கனவு
கண்டேன் பராபரமே!"

அருமையான வாக்கு.

வெற்றுவிட்டால், "அடுத்த தேர்தலில் காங்கிரஸ் ஜயிக்குமா?" என்ற கேள்விக்கு நிச்சயமான பதில் சொல்வது அசாத்தியமான காரியந்தான்.

* * *

பண்டித ஜவாஹர்லால்ஜி நமது எச்சரிக்கைப் பிரசங்கத்தில் கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட் கட்சிகளைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்.

"நாட்டில் பல இடங்களில் கம்யூனிஸ்டுகள் வாரம் ஒரு முறை கூட்டம் போடுகிறார்கள்; சோஷலிஸ்டுகள் இரண்டு வாரத்துக்கு ஒரு முறை கூட்டம் நடத்துகிறார்கள்; ஆனால் காங்கிரஸ்காரர்கள் மாதத்துக்கு ஒரு கூட்டம் கூட நடத்துவதில்லையென்று அறிகிறேன். இப்படியே நிலைமையிருந்தால் காங்கிரஸின் கதி என்ன? விநாசந்தான்!" என்று ஜவாஹர்லால்ஜி எச்சரித்திருக்கிறார்.

காங்கிரஸுக்கு வரக்கூடிய அபாயம் கம்யூனிஸ்ட் கட்சி அல்லது சோஷலிஸ்ட் கட்சி அல்லது வேறு எந்தக் கட்சியினாலும் அல்ல என்பதை நாம் குறிப்பிட விரும்புகிறோம்.

சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட் கட்சிகளோ, அல்லது வேறு எந்த அரசியல் கட்சிகளோ தற்சமயம் நாட்டு மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை. இன்னும் ஒரு வருஷத்துக்குள் பிரமாதமான செல்வாக்கை அடைந்துவிடுவதற்கும் இடமில்லை.

ஜவாஹர்லால்ஜி சொல்வதுபோல் இன்னும் ஒரு வருஷத்துக்குள் பொதுத் தேர்தல் நடைபெறுவதாயிருந்தால், அந்தத் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்களுக்குப் பலமான போட்டி அந்தந்தத் தொகுதியில் கிளம்பும் தனிப்பட்ட சுதந்திர அபேட்சகர்களால்தான் ஏற்படும்.

எந்தெந்தத் தொகுதியில் சரியான காங்கிரஸ் அபேட்சகர்களைப் பொறுக்கி நியமிக்கிறார்களோ, அங்கேயெல்லாம் சுதந்திர அபேட்சகர்கள் நின்றாலும் தோல்வியே யடைவார்கள்; காங்கிரஸ் அபேட்சகர்கள் வெற்றி யடைவார்கள்.

எங்கெங்கே தகுதியில்லாதவர்கள் காங்கிரஸ் அபேட்சகர்களாக நியமிக்கப்படுகிறார்களோ, அங்கேயெல்லாம் சுதந்திர அபேட்சகர்கள் கிளம்புவார்கள். பொது மக்களாகிய வோட்டர்களும் தங்களுடைய காங்கிரஸ் பக்தியையெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட்டுச் சுதந்திர அபேட்சகர்களுக்கு வோட்டுப் போடுவார்கள்.

ஆகவே டாக்டர் சுப்பராயன் தொகுதியில் நடக்கப்போகும் உப தேர்தலில் மட்டும் அல்ல,—அடுத்த வருஷத்திய பொதுத் தேர்தல்களிலே கூட,—"காங்கிரஸ் ஜயிக்குமா? தோற்குமா?" என்னும் கேள்விக்குப் பதில், மாகாண காங்கிரஸ் தலைவர்களையும் அகில இந்திய காங்கிரஸ் தலைவர்களையுமே பெரிதும் பொறுத்திருக்கிறது.

உண்மையும் திறமையும் ஒழுக்கமும் உள்ளவர்களை—வோட்டர்களின் நன்மைக்காக ஓயாமல் உழைத்துப் பாடுபடக் கூடியவர்களை,—மாகாணத் தலைவர்கள் சிபார்சு செய்ய வேண்டும்; அகில இந்தியத் தலைவர்கள் அபேட்சகர்களாக ஒப்புக் கொள்ள வேண்டும். அப்போது காங்கிரஸ் வெற்றி நிச்சயம்.

* * *

ஜனநாயக ஆட்சி முறையில் தேர்தலில் வெற்றி பெறுவதற்குப் பழைய தொண்டுகளையோ தியாகங்களையோ நம்பியிருப்பதில் பயனில்லை. அது ஜனநாயகத்துக்கு உகந்ததும் ஆகாது.

இங்கிலாந்தைப் பாருங்கள். அங்கே இந்த வாரத்தில் மகத்தான பொதுத் தேர்தல் நடைபெறுகிறது.

அரசாங்கத்தை நடத்தும் தொழிற் கட்சியும், சர்ச்சிலைத் தலைவராகக் கொண்ட கன்சர்வேடிவ் கட்சியும் போட்டியிடுகின்றன.

சென்ற மகா யுத்தத்தில் இங்கிலாந்து அழிந்து போகாமல் காப்பாற்றியவர் வின்ஸ்டன் சர்ச்சில் என்பது உலகமெல்லாம் அறிந்த விஷயம். அதைப் பிரிட்டிஷ் மக்களும் பரிபூரணமாய் ஒப்புக் கொள்கிறார்கள்.

ஆனால் சர்ச்சில் எந்தத் தேர்தல் பிரசங்கத்திலாவது, விண்ணப்பத்திலாவது, "நான் யுத்தத்தில் ஜயித்து உங்களைக் காப்பாற்றினேனே, எனக்கு வோட்டுக் கொடுங்கள்!" என்று கேட்கிறாரா? கிடையாது. அப்படிக் கேட்டால் அதைப் பிரிட்டிஷ் மக்கள் ஒப்புக் கொள்ளவும் மாட்டார்கள்.

"இப்போதைய நிலைமையில் தேச நன்மைக்கு உகந்த திட்டம் எது? அதை நன்கு நடத்தக் கூடியவர்கள் யார்?" என்ற பிரச்னையின் பேரிலேயே பிரிட்டனில் பொதுத் தேர்தல் நடக்கிறது. பிரிட்டிஷ் வோட்டர்களும் அந்தப் பிரச்னையை முன்னிட்டே வோட்டுக் கொடுக்கிறார்கள்.

இந்தியாவிலும் சீக்கிரத்தில் மேற்படி நிலைமையே ஏற்படும். காங்கிரஸ் அபேட்சகர்கள் விடுதலைப் போரில்

செய்த தியாகங்களைச் சொல்லி வோட்டுக் கேட்க முடியாது.

"எம். எல். ஏ.க்கள் ஆன பிறகு நீங்கள் என்ன செய்தீர்கள்? மந்திரிகள் ஆன பிறகு என்ன செய்தீர்கள்? இனி என்ன செய்யப் போகிறீர்கள்?" என்றுதான் இந்தியாவிலும் பொதுமக்கள் கேட்பார்கள். சொல்லுகிற திட்டத்தை நிறைவேற்றும் ஆற்றல் அந்தந்த அபேட்சகர்களுக்கு உண்டா என்றும் பார்ப்பார்கள்.

* * *

இன்னும் ஒரு வருஷத்துக்குள்ளே இந்தியாவில் பொதுத் தேர்தல் நடத்த வேண்டும் என்று பண்டித ஜவாஹர்லால்ஜி சொல்லியிருப்பதை நாம் மனப்பூர்வமாக வரவேற்கிறோம். இன்னும் கொஞ்சம் முன்னால் தள்ளிப் போட்டு,— ஆறு மாதத்திற்குள்ளேயே பொதுத் தேர்தல் நடத்தினாலும் நாட்டுக்கு நல்லதுதான்.

ஜனவரி 26உ. நாட்டில் ஏற்பட்ட மகத்தான மாறுதலை மக்கள் நன்கு உணருவதற்குப் பொதுத் தேர்தல் நடத்துவது மிக்க உதவியாயிருக்கும்.

ஆகையால் தேர்தல் சீக்கிரத்திலேயே நடத்த வேண்டியதுதான். ஏதாவது காரணத்தைச் சொல்லித் தள்ளிப் போட்டுக்கொண்டிருப்பது நல்லதல்ல.

அப்படி நடக்கும் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் நாம் விரும்புகிறபடி மகத்தான வெற்றி அடைய வேண்டுமானால், நம் மாபெரும் தலைவர்கள் பின்வரும் இரண்டு காரியங்களில் பூரணமான கவனம் செலுத்த வேண்டும்.

1. காங்கிரஸ் ஸ்தாபனங்களைத் தூய்மைப் படுத்துவதற்கு ஒரு பெரு முயற்சி செய்ய வேண்டும்.

2. காங்கிரஸ் அபேட்சகர்களாகத் தகுதியானவர்களை நியமிப்பதில் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டும்.

ஏற்கனவே இந்த விஷயங்களில் நம்முடைய தேசத் தலைவர்கள் சரியானபடி கவனம் செலுத்தவில்லையென்பதைச் சொல்ல வேண்டியிருக்கிறது. அதனாலேயே நாட்டில் இன்று பல சீர்கேடுகள் ஏற்பட்டு, காங்கிரஸின் செல்வாக்கும் குன்றியிருக்கிறது.

இனியும் நம் தலைவர்கள் இந்தக் காரியங்களில் தீவிர கவனம் செலுத்தாமல் விட்டுவிட்டால், இந்தியா தேசம் குடியரசு பெற்றதின் பலனை அடைய முடியாமல் போய்விடும்.

---

## யானையின் எச்சரிக்கை!




கிழக்கு வங்காளத்தில் உள்ள சிறுபான்மை வகுப்பினர் கொடுமைகளுக்கு உள்ளாக்கப்படுகின்றனர். இந்த நிலைமைக்குத் தக்க பரிகாரம் தேடுவோம் என்று ஜவாஹர்லால்ஜி கூறியிருக்கிறார்.

சட்டசபையில் காலியான இருபது ஸ்தானங்களுக்கு இம் மாகாணத்தில் ஆட்களைப் பொறுக்கி நியமித்தார்களே, அம்மாதிரி ஆட்களை நியமித்தால் காங்கிரஸ் வெற்றி யடைவது துர்லபந்தான். தேர்தலே இல்லாமல், மாகாணத் தலைவர்களே பார்த்து நியமித்தபடியால் அவர்கள் பிரதிநிதிகள் ஆனார்கள். தேர்தல் நடந்திருந்தால் அவர்களில் பலர் வெற்றி பெற்றிருக்க முடியாது. காங்கிரஸுக்குத் தோல்வியை அளித்திருப்பார்கள்.

• • •

ஒரு காலத்தில்,—ஏன், மூன்று வருஷத்துக்கு முன்னால், — காங்கிரஸ் அபேட்சகர் என்று லாந்தர் கம்பத்தை நிறுத்தினாலும் ஜயிக்கும் நிலைமை நாட்டில் இருந்தது. காங்கிரஸின் பெயருக்கு அவ்வளவு மகிமை இருந்தது; அவ்வளவு மந்திர சக்தி இருந்தது.

அந்த மந்திர சக்தி இப்போது போய் விட்டது என்பது பிரத்யட்சமான உண்மை. ஏன் போய்விட்டது என்று ஆராய்ந்தால், அதற்குப் பல காரணங்கள் உண்டு என்பது தெரியவரும்.

காங்கிரஸின் செல்வாக்குக் குன்றியிருப்பதற்கு ஒரு முக்கியமான இயற்கைக் காரணம் இருக்கிறது.

சென்ற முப்பது வருஷமாக, "இந்த நாட்டின் துன்பங்களுக் கெல்லாம் வெள்ளைக் காரனுடைய ஆட்சிதான் காரணம்" என்று சொல்லி வந்தோம்.

ஆகவே இப்போது ஜனங்கள் "வெள்ளைக்காரன்தான் போய் விட்டானே? இன்னும் ஏன் எங்களுடைய துன்பங்கள் தீரவில்லை?" என்று கேட்கிறார்கள்.

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வதற்குத் தக்க ஆள்கள் இல்லை; போதிய பிரசாரகர்கள் இல்லை. இந்த நிலைமையைக் காங்கிரஸுக்கு எதிரிகள் பயன்படுத்திக் கொள்கிறார்கள். காங்கிரஸுக்கு விரோதமான பிரசாரத்தைச் செய்து வருகிறார்கள்.

"ஏன் எங்களுடைய கஷ்டங்கள் இன்னும் தீரவில்லை?" என்ற பொது ஜனங்களின் கேள்விக்குச் சரியானபடி பதில் சொல்லக் கூடியவர்கள் யார்? காங்கிரஸ் ஊழியர்களும் தலைவர்களுந்தான். ஆனால் அவர்களுக் கெல்லாம் இப்போது வேலை சரியா யிருக்கிறது. தலைவர்கள் அரசாங்க நிர்வாகத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். ஊழியர்களில் பெரும்பாலோர் தங்களுடைய சொந்த நன்மையைத் தேடிக் கொள்வதிலும், தங்களுடைய தியாகத்தின் கூலியைச் சம்பாதித்துக் கொள்வதிலும் முனைந்து ஈடுபட்டிருக்கிறார்கள்.

காங்கிரஸ் ஸ்தாபனத்தின் ஊழல்கள், காங்கிரஸ் நிர்வாகத்தில் ஊழல்கள், காங்கிரஸ் எம். எல். ஏ.க்களின் விசித்திர நடவடிக்கைகள், காங்கிரஸ் மந்திரிகளைப் பற்றி ஆதாரத்துடனும் ஆதாரமில்லாமலும் பரவும் வதந்திகள், — இவ்வளவும் காங்கிரஸுக்கு எதிர்ச் சக்திகள் ஆகின்றன.

இந்த நிலைமையைப்பற்றி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு சுட்டிக்காட்டி எச்சரித்திருக்கிறார். காங்கிரஸ் ஸ்தாபனத்தில் வளர்ந்துள்ள ஊழல்களைப் பற்றியும் காங்கிரஸ் ஊழியர்களின் அசட்டையைப் பற்றியும் சொல்லியிருக்கிறார்.

காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஊழல் எவ்வளவு தூரம் புரையோடி யிருக்கிறது என்பதற்கு அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் அத்தாட்சிகள் வெளியாயின.

நாலு லட்சம் 'தீவிர' காங்கிரஸ் அங்கத்தினர் ஆந்திர மாகாணத்தில் மட்டும் சேர்க்கப் பட்டிருக்கிறார்களாம்! அவர்கள் பொய் அங்கத்தினர்களாகவே இருக்க வேண்டுமென்று எடுத்துக் காட்டப்பட்டது.

சத்தியமே உருவான மகாத்மா வளர்த்த ஸ்தாபனத்தில், "மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற கோஷத்துடனேயே இவ்வளவு பயங்கரமான அசத்தியம் புகுந்திருக்கிறது.

இந்தப் பொய் அங்கத்தினர்களைத் தள்ளி விடுவதினால் மட்டுமே காங்கிரஸ் தூய்மை அடைந்து விடுமா? எதற்காக இந்தப் பொய்மை புகுந்தது என்று பார்க்க வேண்டாமா?

"காங்கிரஸ் ஸ்தாபனத்தைக் கைப்பற்றினால், சட்ட சபை அங்கத்தினர்கள் ஆகலாம். சட்ட சபை அங்கத்தினர்கள் ஆனால் மந்திரி உத்தியோகம் கிடைக்கலாம்; அல்லது மந்திரிகள்மீது ஆட்சி செலுத்தலாம்" என்ற துராசையைத் தவிர வேறென்ன இருக்க முடியும்?

காங்கிரஸ் ஊழியர்களைப் பிடித்தாட்டும் இந்தத் துராசைப் பேயை விரட்டுவதற்கு வழி என்ன? நம் தலைவர்கள் நன்கு ஆராய்ந்து அதற்கு ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டும். முதலில், காங்கிரஸைத் தூய்மைப் படுத்த வேண்டும். பிறகு, காங்கிரஸின் சார்பாக அபேட்சகர்களைப் பொறுக்குவதில் பூரண கவனம் செலுத்த வேண்டும். இந்த இரண்டு காரியங்களையும் நம்முடைய தலைவர்கள் சரிவர நிறை

சொல்ல வேண்டும்?" என்று பொது மக்கள் தலை குனிய வேண்டியதாகிறது.

காந்தி மகான் பிறந்து வளர்ந்து உழைத்துப் பாடுபட்டு, உயிரையும் தியாகம் செய்த தேசம் இது. அந்த மகாத்மாவினுடைய ஆத்ம சக்தியினாலேயே இந்தியா தேசம் அடிமைத் தளையிலிருந்து விடுபட்டு இன்று சுதந்திரக் குடியரசாக விளங்குகிறது.

மகாத்மாவின் மனதுக்கு உகந்த திட்டங்களில் மதுவிலக்கு ஒன்று. மதுவிலக்குத் திட்டத்தின் வெற்றிக்காகப் பொது மக்கள் எவ்வளவு கஷ்டப்படவும் எத்தகைய தியாகம் செய்யவும் சித்தமாயிருக்கின்றனர்.

எனவே, சட்டசபையில் எதிர்க் கட்சியினர் காங்கிரஸ் மந்திரி சபையைத் தாக்கிப் பேசும்போது அவர்களுக்கு மந்திரிகள் சுலபமாகப் பதில் சொல்வது சாத்தியமாகி விடுகிறது.

இந்தச் சுலப நிலைமையைக் கனம் கோபால ரெட்டி பயன்படுத்திக்கொண்டார். எதிர்க் கட்சியாரைச் சக்கையாக விளாசினார். அவர்களுடைய தாக்குதல்களைத் தவிடுபொடியாக்கினார்.

கடைசியாக ஒரு பெரிய போடு போட்டார். "காங்கிரஸைப் பொது மக்கள் ஆதரிக்கிறார்களா, இல்லையா என்று பார்ப்பதற்கு இதோ ஒரு சந்தர்ப்பம் கிட்டியிருக்கிறது. இந்தோனேஷியா தூதராகப் போய்விட்ட டாக்டர் சுப்பராயனின் ஸ்தானம் காலியாகிறது. அந்த ஸ்தானத்துக்கு உப தேர்தல் நடத்தியாக வேண்டும். எதிர்க் கட்சிக்காரர்கள் அங்கே காங்கிரஸ் அபேட்சகருக்குப் போட்டியாகத் தங்கள் அபேட்சகரை நிறுத்திப் பார்க்கட்டும். பொது ஜனங்கள் காங்கிரஸை ஆதரிக்கிறார்களா, இல்லையா என்பது தெரிந்து விடும்!" என்று நிதி மந்திரி சவால் விட்டார்.

இச்சமயம் எதிர்க் கட்சி எம். எல். ஏ. ஒருவர், "காங்கிரஸ் அபேட்சகர் தோற்றால் நீர் ராஜினாமா செய்வீரா?" என்று கேட்டாராம்.

"காங்கிரஸ் அபேட்சகர் ஜயித்தால் நீர் ராஜினாமா செய்வீரா?" என்று நிதி மந்திரி திருப்பிக் கேட்டாராம்.

இருவரும் என்ன பதில் சொன்னார்கள் என்பது தெளிவாகத் தெரியவில்லை. தெரிய வேண்டிய அவசியமும் இல்லை. ஒரு உபதேர்தல் முடிவைக் கொண்டு மந்திரிகள் ராஜினாமா செய்ய வேண்டுமென்பது முறையாகாது.

ஆனால் கனம் கோபால் ரெட்டியின் பேச்சிலிருந்து எழும்பியுள்ள ஒரு முக்கியமான கேள்வியைப் பற்றி நாம் ஆராய்வது அவசியமாகும்.

டாக்டர் சுப்பராயனுடைய தொகுதியில் உப தேர்தல் நடக்கப் போகிறது அல்லவா? அதில் காங்கிரஸ் ஜயிக்குமா, தோற்குமா என்பது தான் அந்த முக்கியமான கேள்வி.

மேற்படி கேள்விக்கு நம்முடைய பதில் இதுதான் :—

உப தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகராக நிறுத்தப் படுகிறவருக்குச் சொந்த யோக்யதையும் திறமையும் இருந்தால் அவர் ஜயிப்பார். அதாவது காங்கிரஸ் ஜயிக்கும்.

அப்படிக்கின்றி, சொந்த யோக்யதை இல்லாத மனிதரைக் காங்கிரஸின் பெயரை மட்டும் நம்பி அபேட்சகராக நியமித்தால் அவர் தோற்றுப்போவார். அதாவது காங்கிரஸ் தோற்கும்.

காங்கிரஸ் பெயரால் யாரை நிறுத்தி வைத்தாலும் நிச்சயமாக ஜயிக்கும் காலம் ஒன்று இருந்தது.

அந்தக் காலம் இப்போது இறந்த காலமாகி விட்டது.

காங்கிரஸின் பெயருக்காகவே 100-க்கு 60 வோட்டுகள் அப்போது வந்து விடும்.

சென்ற மூன்று வருஷத்தில் அந்த நிலைமை மாறிவிட்டது.

இப்போது காங்கிரஸின் பெயருக்காக 100-க்கு 30 வோட்டுகள்தான் வரும். காங்கிரஸ் அபேட்சகர் தம்முடைய சொந்த யோக்யதையினால் 100-க்கு 21 வோட்டுகள் சம்பாதித்துக் கொண்டால்தான் வெற்றி பெறுவார்.

சொந்த யோக்யதை என்பதில் படிப்பு, பேச்சுத் திறமை, அறிவு, ஒழுக்கம் எல்லாம் சேரும். அதோடு கூட, அந்தத் தொகுதியில் உள்ள வோட்டர்களின் நலங்களைக் கவனித்து இடைவிடாமல் பொது நலத்தொண்டு செய்யும் ஆற்றலும் சேரும்.

காங்கிரஸ் அபேட்சகரிடம் இந்த யோக்யதைகள் எல்லாம் மிகக் குறைவாக இருந்து, எதிரி அபேட்சகரிடம் மேற்படி குணங்கள் அதிகமாயிருந்தால் எதிரி அபேட்சகர்தான் வெற்றி பெறுவார் என்பது நிச்சயம்.

ஆகவே காங்கிரஸ் ஜயிக்குமா, தோற்குமா என்பது காங்கிரஸ் அபேட்சகராக யாரை நியமிப்பார்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது.

இன்னும் தெளிவாகச் சொல்ல வேண்டும் என்றால், சமீபத்தில் இந்திய

# காங்கிரஸ் ஜயிக்குமா? தோற்குமா?

இத்தகைய கேள்வியே நம்மில் பலரின் செவிகளுக்கு நாராசமாயிருக்கும். மகான்களும், மகாத்மாக்களும், தேசபக்தர்களும், தியாகிகளும் வளர்த்த மாபெரும் தேசிய ஸ்தாபனம் தோற்கவாவது? — இப்படியும் ஒரு கேள்வியா? கேட்கலாமா?

ஆயினும் காலத்தின் கோலத்தினால் இத்தகைய கேள்வி சமீபத்தில் பெரிய இடங்களிலே கேட்கப்பட்டு விவாதிக்கப்பட்டும் வருகிறது.

முதலாவதாக, நம்முடைய சென்னைச் சட்ட சபையில் இந்தக் கேள்வி எழுந்தது. நமது நிதி மந்திரி ஸ்ரீ கோபால ரெட்டி எதிர்க் கட்சியினருக்குச் சவால் விடும் முறையில் இந்தக் கேள்வியைக் கிளப்பினார்.

அடுத்தபடியாக, டில்லியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்திலும் மேற்படி கேள்வி எழுந்தது. காங்கிரஸ்காரர்களுக்கு எச்சரிக்கை செய்யும் முறையில் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு அந்தக் கேள்வியை அ. இ. கா. கூட்டத்தில் எழுப்பிப் பேசினார்.

மேற்கூறிய இருவரும் மேற்படி கேள்வியை எழுப்பிய முறைகள், ஒரே விதமான பிரச்னையை இரண்டு முற்றும் மாறுபட்ட கோணங்களிலிருந்து கிளப்ப முடியும் என்பதற்கு உதாரணங்களாயிருந்தன.

* * *

சென்னைச் சட்டசபையில் "காங்கிரஸ் தோற்குமா?" என்ற கேள்வி எப்படி எழுந்தது என்று பார்க்கலாம்.

புதிய குடியரசுத் திட்டத்தின் கீழ் முதன் முதலாகச் சென்னைச் சட்டசபை கூடியபோது மந்திரிகளும் மற்றவர்களும் குடியரசுக்கு விசுவாசப் பிரமாணம் செய்தார்கள்.

பின்னர், மந்திரி சபையாரின் கொள்கைகளையும் திட்டங்களையும் விளக்கி மேன்மை தங்கிய நம் கவர்னர் ஒரு பிரசங்கம் செய்தார்.

அந்தப் பிரசங்கத்தின் பேரில், ஜனநாயக சம்பிரதாயத்தை யொட்டிச் சிற்சில அங்கத்தினர் பேசினார்கள். காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் மந்திரிசபை சாதித்த காரியங்களைப் பாராட்டியும் சாதிக்கப் போகிற காரியங்களை மெச்சியும் பேசினார்கள்.

"எதிர்க் கட்சி" என்ற மரியாதைப் பெயருடன் சென்னைச் சட்ட சபையில் ஸ்தானம் வகிக்கும் சில முஸ்லிம் லீக் அங்கத்தினரும் வேறு சில உதிரி அங்கத்தினரும் காங்கிரஸ் மந்திரி சபையினர் செய்திருக்கும் காரியங்களையும் செய்யப் போகும் காரியங்களையும் தாக்கிப் பேசினார்கள். செய்யாமல் விட்டுவிட்ட காரியங்களைப்பற்றியும் குறை கூறினார்கள்.

சென்னைச் சட்ட சபையில் உள்ள இந்த எதிர்க் கட்சிக்காரர்களுக்குத் தேசத்தில், அதாவது பொது ஜனங்களிடையே, செல்வாக்கு ஒன்றுமில்லையென்பது வெளிப்படை. அவர்களிலே பெரும்பாலோர் தேச விடுதலை இயக்கத்துக்கு விரோதமாயிருந்தவர்கள் என்பதைப் பொதுமக்கள் இதற்குள் மறந்திருக்க முடியாதல்லவா?

ஆயினும், துரதிர்ஷ்டவசமாக ஏற்பட்டிருக்கும் ஒரு நிலைமை என்னவென்றால், பொது மக்களின் மனதில் குமுறும் பல குறைகளை இந்த எதிர்க் கட்சியார்தான் சட்ட சபையில் வெளியிட வேண்டியதாயிருக்கிறது. கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் மனம் விட்டுப் பேச முடிவதில்லை. மேலும் காங்கிரஸ் எம். எல். ஏ.க்களே மக்களின் மனக் குறைகளுக்குக் காரணஸ்தர்களாயிருக்கும் நிலைமையில், அவர்கள் எப்படி அக்குறைகளை வெளியிட முடியும்!

எதிர்க் கட்சி எம். எல். ஏ.க்கள் பொதுமக்களின் குறைகளை வெளியிடுகிறார்கள். அதோடு பொதுமக்களுக்குப் பிடிக்காத விஷயங்களையும் சேர்த்துக் கொள்கிறார்கள். உதாரணமாக, சில பொருள்களுக்கு விற்பனை வரி அதிகமாக்கியிருப்பதைக் கண்டிக்கிறார்கள்; கண்ட்ரோல்களினால் ஏற்படும் கஷ்டங்களை எடுத்துச் சொல்கிறார்கள்; விவசாய இலாக்கா சரியாகப் பிண்ணாக்கு விநியோகிக்கவில்லையென்பதைச் சுட்டிக் காட்டுகிறார்கள். உடனடியாக, "மதுவிலக்குச் சட்டம் சுத்த முட்டாள்தனம்; மதுவிலக்கை எடுத்து விட்டு மறு காரியம் பார்க்க வேண்டும்" என்கிறார்கள்.

"கடவுளே! இப்படிப்பட்டவர்களா நம்முடைய குறைகளை எடுத்துச்

பழிக்குப் பழியாக இப்போதைய மந்திரி கோஷ்டியாரும் ஸ்ரீ பிரகாசத்தின் மீது சில பழிகளைச் சுமத்தினார்கள். இருதரப்புப் பழிகளும் ஆதாரம் அற்றவை என்று ஏற்பட்டு விட்டது. ஆனால் காங்கிரஸுக்குள்ளேயே ஒரு கோஷ்டியார் மீது இன்னொரு கோஷ்டியார் அநாவசியமாகப் பழி சுமத்தியது எதற்காக? அதிகார ஆசையைத் தவிர, —மந்திரி பதவி மீது மோகத்தைத் தவிர,— வேறுஎன்ன காரணம் இருக்க முடியும்? அதிகார மோகத்தினால் ஒருவர் மீது ஒருவர் வீண் பழி சுமத்திக் காங்கிரஸுக்குக் கெட்ட பெயர் உண்டாக்கியவர்களுக்குத் தண்டனை ஒன்றும் கிடையாதா?



ஸ்ரீ சரத் சந்திர போஸ்

## போனது போகட்டும்

குற்றச் சாட்டுகள் ஆதாரமற்றவை என்று மூவர் கமிட்டி தீர்ப்பளித்திருந்த போதிலும், மந்திரிகளுக்குச் சில யோசனைகளும் சொல்லியிருக்கிறார்கள். சரியாக நடந்து கொண்டால் மட்டும் போதாது என்றும், தங்கள் பேரில் சந்தேகமே ஏற்படாதவாறு நடந்து கொள்ள வேண்டும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். உறவினர்களுக்குக் கடன், லைசென்ஸ், பெர்மிட் கொடுக்கும் விஷயத்தில் சொந்தமாக எதுவும் செய்யாமல் மந்திரி சபையின் கூட்டுப் பொறுப்புக்கு விடுவது நலம் என்று தெரிவித்திருக்கிறார்கள். அப்படிப் பொய்ப் புகார் ஏதேனும் வந்தால் உடனே உண்மையை எடுத்துச் சொல்லிப் பொதுமக்களைத் திருப்திப்படுத்த வேண்டும். கனம் கோபால் ரெட்டியின் உறவினர் அடங்கிய கம்பெனிக்குக் கடன் கொடுத்த விஷயத்தில் இந்த முறையையே நாம் சிபார்சு செய்திருந்தோம். அச்சமயம் "முறை தவறி ஒன்றும் நடந்து விடவில்லை" என்று மந்திரிகள் ஒரு அறிக்கை விட்டிருந்தால், எத்தனை வீண் வம்புக்கு இடமில்லாமல் போயிருக்கும்?

## வங்கத்தின் நஷ்டம்

வங்க மாதாவின் சிறந்த புதல்வர்களில் ஒருவரான ஸ்ரீ சரத் சந்திர போஸ் திடீரென்று மரணமடைந்த செய்தி நாடெங்குமுள்ள தேச பக்தர்களைத் திடுக்கிடச் செய்திருக்கும். அமரர் நேதாஜியின் சகோதரர் ஸ்ரீ சரத் போஸ். தேசத்துக்காகப் பல தியாகங்களைச் செய்தவர். பல போராட்டங்களில் ஈடுபட்டவர். வங்க மக்களின் அன்புக்கும் பெருமதிப்புக்கும் பாத்திரமாகியிருந்தவர். தேசத்துக்காகச் சுதந்திரத்தைத் தேடியது மட்டுமல்லாமல் தமது அரசியல் வாழ்விலும் தனிச் சுதந்திரப் போக்கை அனுசரித்து வந்தது அவருடைய விசேஷ குணம். இந்த விசேஷ குணம் காரணமாக அவரால் மற்ற தேசத் தலைவர்களுடன் ஒத்துழைத்து வேலை செய்ய முடியாமற் போயிற்று. சில மாதங்களுக்கு முன்பு ஸ்ரீ சரத் போஸ் கல்கத்தாவில் நடந்த உப தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகரை எதிர்த்து நின்று மகத்தான வெற்றியடைந்தது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். அதோடு நாட்டில் உள்ள தீவிர சக்திகளையெல்லாம் ஒன்று சேர்த்து ஐக்ய இடதுசாரிக் கட்சியை அமைப்பதற்கு அவர் மிக்க தீவிரமாக முயற்சி செய்து வந்தார். மனிதன் நினைப்பது போலவா நடக்கிறது? "நான் இதைச் செய்து விடுவேன்; அதைச் செய்து விடுவேன்" என்று மனிதன் பெருமை அடித்துக் கொள்ளும் போது ஆண்டவன் புன்னகை புரிகிறார் என்று பெரியோர்கள் சொல்வதுண்டு. ஸ்ரீ சரத் சந்திர போஸ் அகில இந்திய இடதுசாரிக் கட்சியைப் படாடோபத்துடன் ஆரம்பித்தபோதும் கடவுள் அவ்விதம் புன்னகை புரிந்தார் போலும்!

ராஜாராம் மோகன் ராய், கேசவ சந்திர சென், சுரேந்திரநாத் பானர்ஜி, அசுவினி குமார தத், விபின சந்திர பால், ராஷ் விஹாரி கோஷ், தேசபந்து தாஸ், ஜே. எம். சென் குப்தா முதலிய வங்கச் சிங்கங்களின் பரம்பரையில் வந்த கடைசிச் சிங்கம் ஸ்ரீ சரத் சந்திர போஸ். இந்த மகாவீரத் தியாகிகளின் பரம்பரையில் இனி யார் வங்க நாட்டில் தோன்றப் போகிறார்களோ தெரியவில்லை. தற்சமயம் பலவகைத் துரதிர்ஷ்டங்களுக்கு ஆளாகி யிருக்கும் வங்க நாட்டை உய்விக்க அத்தகைய மாபெரும் புதிய தலைவர் ஒருவர் தேவையல்லவா?



# கல்கி

மலர் 9 இதழ் 30

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்


## என்ன சேதி?

### சிறையில் பயங்கரம்

வேறு எந்த நாட்டிலும் விட இந்தியா தேசத்தில் அஹிம்சா தர்மத்தில் பற்றுள்ளவர்கள் அதிகம். காந்தி மகானுடைய வாழ்வும் உபதேசங்களும் அஹிம்சைப் பற்றை அதிகமாக வளர்த்திருக்கின்றன. கொலைக் குற்றத்துக்குத் தூக்குத் தண்டனை கூடாது என்று சொல்லுவோர் இங்கே பலர் இருக்கின்றனர். அஹிம்சா மூர்த்தியான மகாத்மாவை ஒரு பாதகன் பட்டப்பகலில் சுட்டுக் கொன்றான். "அவனுக்கு மரண தண்டனை விதிப்பது அஹிம்சைக்கு விரோதம் அல்லவா?" என்று சிலர் வாதித்தார்கள். அப்படிப்பட்ட நாட்டில், நாலு பக்கமும் கட்டுக்காவல் சூழ்ந்த சிறைச்சாலை யொன்றில் இருபது கைதிகள் சுட்டுக் கொல்லப் பட்டார்கள் என்ற செய்தி, பயங்கரத்தையும் அருவருப்பையும் உண்டாக்குவதில் வியப்பு ஒன்றுமில்லை. சேலம் சிறையில் நடந்த சம்பவம் பொது மக்களை ஒரு கலக்குக் கலக்கிவிட்டது என்பதில் சந்தேகமில்லை. என்னதான் கம்யூனிஸ்ட் கைதிகள் கோபமூட்டும் செயல்கள் புரிந்திருந்தாலும், இருபது பேரைச் சுட்டுக் கொல்வதற்குரிய அவ்வளவு கொடுஞ் செயல்களைப் புரிந்திருக்கக் கூடும் என்று நம்பவே முடியவில்லை. இது விஷயமாக உண்மையைக் கண்டு பிடிக்கச் சென்னை சர்க்கார் நீதிபதிகளை நியமித்திருப்பதைப் பாராட்டுகிறோம். நீதிபதிகள் கண்டு பிடித்துச் சொல்வது என்னவாயிருந்தாலும், இம்மாதிரி சம்பவங்கள் இனியாவது நடைபெற முடியாமல் செய்வதற்கு உடனே சர்க்கார் தக்க வழிகளைத் தேட வேண்டும். கம்யூனிஸ்ட் கட்சியின் பலத்தையும் செல்வாக்கையும் குறைக்கும் வழி இது வல்ல வென்பதையும் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். கம்யூனிஸ்டுகளை விரத்தியாகிகளாக்கும் நிகழ்ச்சிகள் இவை. கலகம் விளைவித்து உயிரைக் கொடுத்தாவது தங்களுடைய கட்சியின் பலத்தை வளர்க்க விரும்பும் கம்யூனிஸ்டுகளின் வலையில் விழுவது அறிவுடைமையாகுமா?

### முடிந்த படலம்

சென்னை மந்திரிகள் மீது குற்றச் சாட்டுப் படலம் ஒருவாறு முடிவடைந்தது. குற்றச்சாட்டுகளை விசாரிப்பதற்கென்று ஏற்பட்ட கமிட்டியில் பாபு ராஜேந்திரர், பண்டித ஜவாஹர்லால், சர்தார் வல்லபாய் ஆகியவர்கள் அங்கத்தினர். இவர்களுடைய தீர்ப்பைப் பொது மக்கள் முழுமனதுடன் ஒப்புக்கொண்டே தீர வேண்டும். "குற்றச் சாட்டுகள் முதல் எடுப்பில் பயங்கரமாகத் தோன்றுகின்றன. ஆராய்ந்து பார்த்தால் அவற்றில் எதுவும் நியாய விசாரணை நடத்துவதற்குரிய அளவு முக்கியமானதாக இல்லை" என்று மேற்படி மூன்று தலைவர்கள் கமிட்டி தீர்ப்பு அளித்திருக்கிறது. ஆகையால் குற்றச் சாட்டுக்களை அப்படியே நழுவ விட்டு விடவும் தீர்மானித்திருக்கிறது. ரொம்ப சரி. அற்ப விஷயங்களைப் பெரிது படுத்தி மேலும் வளர்த்துக் கொண்டிருப்பதினால் எந்த விதமான நன்மையும் இல்லைதான்.

ஆனால் ஒரு விஷயத்தை இங்கே நாம் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். குற்றச் சாட்டுகளைச் சுமத்தியவர்கள் யார்? சுமத்தப்பட்டவர்கள் யார்? சென்னைச் சட்டசபையிலுள்ள காங்கிரஸ் எம். எல். ஏ.க்களில் ஒரு கோஷ்டியார் இன்னொரு கோஷ்டியார் மீது சுமத்தினார்கள். அதாவது மாஜி மந்திரி பிரகாசம் கோஷ்டியார் இப்போதைய மந்திரிகள்மீது சுமத்தினார்கள். அதற்குப்

# மாஸ்கோ விசேஷ நிருபரின் செய்தி

[நமது சித்திரக்காரரின் கற்பனை]

கதவு துவாரத்தின் வழியாக உள்ளே பார்த்தேன். மார்ஷல் ஸ்டாலின் உட்கார்ந்திருந்தார். அவருடைய தலையும் மீசையும் நரைத்திருந்தாலும் ஆசை நித்திய யௌவனமாகவே காணப்பட்டது.



இதென்ன? ஓஹோ! காலை ஆகாரம் வருகிறது. ஸ்டாலின் அதைச் சாப்பிடுவதில் முனைகின்றார். ஐயையோ! அவை முட்டைகளா? அல்லது அணுகுண்டுகளா?



ஆகாரம் முடிந்ததும் மா சே துங், சௌ இன்லாய் இவர்கள் வருகிறார்கள். "சென்ற கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானம் அமுலுக்கு வந்து விட்டதா?" என்று ஸ்டாலின் கர்ஜிக்கிறார்.



அவர்கள், ஸ்டாலினின் அபூர்வ யோசனைக்காக அவருக்கு வந்தனம் செலுத்திவிட்டு, பத்து கோடி சீனர்களை அழைத்து வர....



....ஸ்டாலின் பீரங்கி மருந்தைச் சட்னியாக உபயோகித்துக் கொண்டு அந்தப் பத்து கோடி பேரையும் பட்சித்து விட்டு,...



....'வெளியே இன்னும் யாராவது மிச்சம் மீதி இருக்கிறார்களா?'' என்று இடி முழக்கம் செய்கிறார்!!!!




மார்ஷல் ஸ்டாலின் சீனாவின் ஜனத்தொகையில் பத்துக் கோடியாவது குறைக்க வேண்டுமென்று சீனத் தலைவர் ஜெனரால் மா சே துங்கிடம் கூறினாராம்.

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 9 }
இதழ் 30 }

பிப்ரவரி 26

{ விரோதி
{ மாசி 15௳



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

# ஜுபிடர்

மகிழ்ச்சியுடன் அறிவிக்கும் மற்றொரு வெளியீடு

# விஜய குமாரி

நவரசங்களும் நிறைந்த
அருமையான சித்திரம்......

டைரக்ஷன்
**ஏ.எஸ்.ஏ.சாமி**

உங்கள் அபிமான நக்ஷத்திரங்கள்
எல்லோரும் நடித்திருக்கிறார்கள்......

| | |
|---|---|
| கே.ஆர்.ராமஸ்வாமி | டி.ஆர்.ராஜகுமாரி.. |
| டி.எஸ்.பாலையா | குமாரி கமலா... |
| செருகளத்தூர் சாமா | பி.கே.சரஸ்வதி... |
| ஆர்.பாலசுப்ரமணியம் | கே.எஸ்.அங்கமுத்து.. |
| கே.ஆர்.ராமசிங் | எம்.எஸ்.சிவபாக்கியம். |
| எம்.என்.நம்பியார் | ஆர்.மாலதி..... |

நடனங்கள்-லலிதா பத்மினி-வைஜயந்திமாலா- தயாரிப்பு-எம்.சோமசுந்தரம்-ஸ்டுடியோ-சென்ட்ரல்



# உலகில் ஒரே ஒரு...





# தாஜ்மஹால்

கலைப் பயிற்சியில் கைதேர்ந்த இந்தியக் கைத்தொழில் நிபுணர்கள் மேம்பட்ட அதிகத்தைப் பல தொழில்களில் இன்றும் அவர்கள் காப்பாற்றி வருகிறார்கள். அப்பேர்ப்பட்ட நிபுணர்கள் தாஜ்மஹாலைப் போன்று தனிப்பட்ட அழகும் பல விதங்களிலும் உயர்வான கடாவ் வாயில்களை நெய்கிறார்கள்.



# கடாவ்

அழகு, குணம் வாய்ந்த

## வாயில்கள்

தி கடாவ் மக்கன்ஜி ஸ்பின்னிங் & வீவிங் கம்., லிட்.

மில்கள்: பைகுலா, பம்பாய் . ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பெலார்ட் பியர், போர்ட், பம்பாய்

துணிக்கடை: மூல்ஜி ஜேதா மார்க்கெட், கோவிந்த் சௌக் பம்பாய் 2.

# உமா

ஆபரணங்களை எல்லா விசேஷ பண்டிகைகளிலும் உபயோகியுங்கள்

10 வருஷம் உத்திரவாதமுள்ளது




800 டிசைன்கள் கொண்ட கேட்லாக் இனம்

வி. பி. செலவு அணு 15 தனி

○●○

## உமா கோல்ட் கவரிங் ஒர்க்ஸ்

மசூலிப்பட்டிணம்

சீமைச்
சுண்ணாம்பால்
நீங்கள்
துணியை
வெளுக்க
முடியாது

[illegible]

கேரளா

# வாஷ்வெல்

WASHWELL BAR SOAP

சுத்தமான
பார்
ஸோப்

வீட்டுச்சலவையை
மிகவும் சுலபமாக்குவது

தயாரிப்பாளர்கள் —

கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட்
கள்ளிக்கோட்டை

டிபார்ட்மெண்ட் ஆப் காமேர்ஸ் அண்டு இண்டஸ்ட்ரீஸ்

கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்

## நோயுற்ற குழந்தைகளுக்குப் பல வருடங்களாக சேவை புரிந்து வருகிறது



ஜம்மியின் லிவர்க்யூர் பல்லாண்டுகளாக செய்து வரும் சேவையால் ஆயிரக் கணக்கான விலையற்ற சிற்றுயிர்கள் ஈரல் குலைக்கட்டி வியாதிகளிலிருந்து காப்பாற்றி மனித சமூகத்திற்கு விசேஷ நன்மை புரிந்து வருகிறது.

டாக்டர்கள் இவ் வியாதியை போக்க ஆரம்ப நிலை, கட்டி முதிர்ந்த நிலைக்குத் தகுந்தவாறு 'ஸிம்பிள்' அல்லது 'காம்ப்ளிகேட்டட்' லிவர்க்யூர் மருந்துகளை பிரயோகம் செய்து இவ் வியாதியை குணப் படுத்துகிறார்கள்.

ஜம்மியின் ஸிம்பிள் லிவர்க்யூர் சிறிய அளவில் கொடுத்துவர, வியாதி வராமல் தடுக்கவும், பசி, ஜீரண சக்தி விருத்தி செய்யவும் மலச்சிக்கல்களைப் போக்கி ஈரல், குலைகளை சரியானபடி வேலை செய்கிறது.

முன்னால் ஈரல் குலைக்கட்டி நோயினால் பீடிக்கப்பட்ட குழந்தைகளின் தாய்மார்கள் திரும்பவும் கர்ப்பம் தரிக்கும் பொழுது ஜம்மியின் டானிக்கை உபயோகப் படுத்துவது நல்லது. பிறக்கப் போகும் குழந்தையின் ஈரல், குலைகள் தாய் மூலமாய் ஏற்படுகிறது என்ற ஆயுர்வேத சித்தாந்தத்தை அனுசரித்து இந்த டானிக் தயாரிக்கப்பட்டுள்ளது.



**ஜம்மியின்**

# லிவர்க்யூர்

ஜம்மி வெங்கடரமணய்யா அன் ஸன்ஸ்
மைலாப்பூர் மதராஸ் 4 (போன் நெ. 8133)
தெப்பகுளம் திருச்சி, பெரியதெரு கும்பகோணம், பெங்களூர், பம்பாய் 4. (போன் நெ. 41583) மற்றும்: லக்னோ, கல்கத்தா.

J. 234

# தி யூனைடெட் கமர்ஷியல் பாங்க், லிமிடெட்

வழங்கப்பட்ட மூலதனம்
ரூ. 4 கோடி

செலுத்தப்பட்ட மூலதனம்
ரூ. 2 கோடி

ரிஸர்வ் நிதி
ரூ. 52½ லக்ஷம்

சகலவிதமான பாங்கிங் அலுவல்களும் ஏற்றுக் கொள்ளப்படும்

•

தலைமை ஆபீஸ்:
கல்கத்தா

G. D. BIRLA
CHAIRMAN



B. T. THAKUR
GENERAL MANAGER



# ருசிமிகுந்த ஓவல்டின்

தாய், தன் குழந்தைக்கு

**இயற்கை** முறையில்

பால் புகட்ட உதவிபுரியும்.

தாய்ப்பாலே குழந்தைக்கு சிறந்த உணவு. சிசுவின் நுட்பமான ஜீரண சக்திக்கு உகந்தபடி போஷாக்களித்து வளரச்செய்யவல்லது.

“ஓவல்டின்” அபரிமிதமாக, புஷ்டியான தாய்ப்பால் கிடைக்கச்செய்யும். ஆகவே, கர்ப்பிணிகளுக்கும் சிசுக்களை போஷிக்கும் தாய்மாருக்கும் மிகுந்த பயன் அளிப்பதாகும்.

புஷ்டியும் ஜீவசக்தியும் அளிக்கும் குணமுள்ள பழுத்த பார்லி மாக்ட், சுத்தமான ஏட்டுப்பால், பிரத்யேகமாய் தயாரித்த கோக்கோ, மற்றும் மதிப்புவாய்ந்த இயற்கை பாஸ்படேட்கள், விடமின்கள் இவற்றின் சத்துக்கள் அடக்கியிருக்கவுள்ள பொருள்

இன்றே “ஓவல்டின்” சாப்பிட ஆரம்பித்து உங்களது குழந்தையின் எதிர்கால க்ஷேமத்திற்கு உதவுங்கள். இப்பெயர் கொண்டது இது ஒன்றே.

# ‘OVALTINE’

## ஓ வ ல் டி ன்

உலகில் மிகப் பிரசித்திபெற்ற உணவு பானம்

வினியோகஸ்தர்கள். கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.




OV. 300.

இப்பொழுது தமிழ்நாட்டிலும் மலபாரிலும்
வெற்றியுடன் நடைபெறுகிறது




பிப்ரவரி 14ம் உ முதல்
ஆந்திர தேசமெங்கும் நடைபெறுகிறது

வாழ்க்கை முழுதும் மறக்க முடியாதது



உள்ளமுருக்கும் கதை
உணர்ச்சி மிக்க வசனம்
செவிக்கின்பம் தரும் இசை
எதிரொலிக்கும் நகைச்சுவை
கண் கவரும் நாட்டியங்கள்
இது ஒரு ஏவிஎம் சித்திரம்

# வாழ்க்கை



இப்பொழுது எங்கும் அமோக வெற்றியுடன்

AVM